# புதுமையான சமையல் குறிப்புகள்

## வாத்து வடிவக் கட்லட்

தேவையான பொருட்கள்:

உருளைக் கிழங்கு ஒரு கிலோ
கேரட் கால் கிலோ
பீன்ஸ் கால் கிலோ
பட்டாணி கால் கிலோ
பெரிய வெங்காயம் 3
பச்சைமிளகாய், இஞ்சி
உப்பு – தேவையான அளவு
கட்லட் பொரித்து எடுப்பதற்குத் தேவையான எண்ணெய்

செய்முறை:

உருளைக் கிழங்கைத் தோலுடன் போட்டு முழுசாக வேக வைக்கவும். வெந்ததும் தோல் உரித்துக் கட்டி இல்லாமல் நன்றாக மசித்துக்கொள்ளவும்.

கேரட், பீன்ஸ் துண்டுகளாக நறுக்கிப் பட்டாணியுடன் ஆவியில் வேக வைக்கவும்.

இஞ்சி, பச்சை மிளகாய் சிறிய துண்டுகளாக நறுக்கிச் சிறிது எண்ணெய் விட்டு வதக்கவும். வாசனை வந்ததும் வெந்த காய் கறிகளைப் போட்டு, மசித்து வைத்திருக்கும் உருளை கிழங்கில் சிறிது போட்டு, தேவையான அளவு உப்புப் போட்டு மசாலா தயாரித்துக் கொள்ளவும்.

பின்பு மீதியுள்ள மசித்த உருளைக் கிழங்கைச் சிறிது எடுத்து அரிசி மாவு தொட்டுக் கொண்டு முட்டை வடிவத்தில் இரண்டு செய்து கொள்ளவும். ஒன்றில் சிறிது காய் கறி பூரணம் வைத்து மற்றொன்றை வைத்து மூடிக் கொள்ளவும். பின்பு சிறிய உருண்டை வடிவத்தில் உருட்டி அதன் மேல் பாகத்தில் வைத்து ஒட்டி விடவும். பின்பு எண்ணெயில் போட்டு ஜாக்கிரதையாகத் திருப்பிவிட்டு பொன் கலரில் பொரித்து எடுக்கவும். பின்பு கண்களுக்கு இரண்டு வால் மிளகும் மூக்கிற்குச் சிறிய கேரட் துண்டையும் தலையில் (உருண்டை வடிவமான பாகத்தில்) சொருகி வாத்துக்களை முட்டை கோஸ், அல்லது காஸ் வைத்து பரப்பிய தட்டில் வைத்து அழகாக அடுக்கவும்.

Edited, Printed and Published by V. Murali on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032 (Phone: 431543)
Assistant Editor: Manjula Ramesh

## மார்ஸிபான்

தேவையான பொருட்கள்:

முந்திரிப் பருப்பு 200 கிராம்
சர்க்கரை 300 கிராம்
பேரீச்சம்பழம் 250 கிராம்
செர்ரி பழம் 100 கிராம்
பாதாமி எசென்ஸ் கால் டீஸ்பூன்
கலர் (ஆரஞ்சு, பச்சை, வயலட்.)

செய்யும் முறை

முந்திரிப் பருப்பைத் தூள் செய்து கொள்ளவும். (மிக்சியில் தூள் செய்யலாம்)

சர்க்கரையைச் சிறிது தண்ணீர் ஊற்றிப் பாகு காய்ச்சவும்.

கம்பிப் பதம் வந்ததும் முந்திரித் தூளைக் கொட்டிக் கிளறி பாத்திரத்தில் ஒட்டாமல் வரும் சமயம் ஒரு டீஸ்பூன் நெய் ஊற்றி கிளறி இறக்கி, நெய் தடவிய படப்பைக் கல் மேல் ஊற்றி விடவும்.

ஐந்து நிமிடத்தில் ஆறிவிடும். பின்பு அதை எடுத்து அம்மியில் நைஸாக அரைத்து விழுதை மூன்று நான்கு பாகங்களாகப் பிரித்து, ஒவ்வொரு பாகத்திற்கு ஒவ்வொரு கலர் போட்டுப் பிசையவும்.

பின்பு உள்ளே பேரீச்சம்பழமோ, செர்ரியோ வைத்து உருட்டி படத்தில் உள்ளது போன்று விதவிதமாக ஷேப் செய்யவும்.

உதாரணம்: ஆரஞ்சு கலர் சேர்த்த விழுதைச் சிறிது எடுத்து பேரிச்சம் பழம் உள்ளே வைத்து மூடி கேரட் மாதிரி வடிவம் செய்து பச்சைக் கலரில் காம்பு வைக்கவும். அதே மாதிரி செர்ரி பழம் உள்ளே வைத்து கத்தரிக்காய் கலர் விழுதை வைத்து மூடி கத்தரிக்காய் வடிவம் செய்து பச்சைக் கலரில் காம்பு வைக்கவும்.

இதே போல் நமக்குத் தோன்றிய காய்கறி, பழ வகைகள் செய்து அலங்காரமாக வைக்கலாம். ரொம்ப ருசியாகவும் இருக்கும். (சீர் தட்டில் வைப்பதற்கு உகந்தது.)

-பாகீரதி நடராஜன்

வண்ணப் படம்: பால்ராஜ்

# பரிசு பெற்ற கட்டுரைகள்

## பரிசளிப்பவர்கள்: தங்கமாளிகை ஜுவல்லர்ஸ்

104, உஸ்மான் ரோடு,
சென்னை-17.





முதற்பரிசு பெற்ற கட்டுரை

### இப்படித்தான் குடும்பத்தைச் சிறப்பாக நடத்துவேன்!

"இப்படித்தான் குடும்பத்தைச் சிறப்பாக நடத்துவேன்" என்ற தலைப்பில் ஒவ்வொரு மணமாகாத பெண்ணும் நீண்ட கட்டுரை ஒன்றையே மனத்தில் எழுதி வைத்திருப்பாள். அதில் சந்தேகமே இல்லை. "என் குடும்பம்" அப்படிச் சிறந்திருக்கும் இப்படி சிறந்திருக்கும், என் குடும்பத்தை நான் இப்படி இப்படி நடத்துவேன் என்று எல்லாம் ஒரு பெரிய லிஸ்டே அதில் இருக்கும். கோடி வீட்டுக் காமாட்சியும், பக்கத்து வீட்டுப் பங்கஜமும் என் குடும்பத்தைப் பார்த்து பொறாமைப்பட வேண்டும், எதிர் வீட்டு விமலா என்ன குடும்பமா நடத்துகிறாள்? சேசே! நானெல்லாம் ஒரு நாளும் அப்படி இருக்கவே மாட்டேன் என்று நாளொரு கனவும் பொழுதொரு இட்டமும் பிறந்து கொண்டே இருக்கும். ஆனால் இதெல்லாம் திருமணம் ஆகும்வரைதான். அதே பெண்ணுக்குத் திருமணமாகி அவள் நிஜ வாழ்க்கைக்குள் அடியெடுத்து வைக்கும் போதோ கேட்கவே வேண்டாம். கற்பனை பண்ணி வைத்ததிலிருந்து மாறுபட்ட கணவன் முதலில் ஒரு பிரச்னையாவான்.

மாமனார் மாமியார் சாதாரணமாகப் பேசினாலும் அது தொணை தொணப்பாகும். வீட்டில் அங்கும் இங்கும் இருக்கும் கணவனின் உடன் பிறந்தவர்களைப் பார்த்தாலே எரிச்சல் வரும். கணவன் நீயும் ஏதாவது ஒரு இடத்தில் வேலை கிடைத்து வேலைக்குப் போனால் நலமாயிருக்கும் என்றால், "அப்பாடி, அதெல்லாம் என்னால் முடியாது" என்றும், 'வேலைக்குப் போக வேண்டாமே! வீட்டில் இருந்து வீட்டைக் கவனித்தால் போதாதா? என்றால் "அதற்கெல்லாம் ஒன்றும் படிக்காத முட்டாளைக் கட்டியிருக்க வேண்டும். வீட்டுக்குள்ளேயே என்னால் அடைந்து கிடக்க முடியாது" என்றும் வம்பு பண்ணத் தோன்றும். நடைமுறையில் இப்பொழுதெல்லாம் வீட்டிற்கு ஒரு திருமணம் தகராறில் முடிகிறது தெரியுமா? பெண்ணென்றால் அவளுக்குக் குடும்பத்தின் மீது உண்மையான பாசமும் அன்பும், இனி இது தான் தன் குடும்பம் என்றபற்றும் இருக்க வேண்டும். அப்படி இருக்குமானால் இதைப் போன்ற சிறுபிள்ளைத்தனமான பிரச்னைகள் தோன்றவும் தோன்றாது. அவள் குடும்பமும் சிறந்து இருக்கும்.

குடும்பத்தைச் சிறப்பாக நடத்த, குடும்பம் என் ஒருத்தியால் மட்டுமே ஆனதல்ல. நான் அப்படி நடத்துவேன், இப்படி நடத்துவேன் என்றெல்லாம் கூறிக் கொண்டிருக்க, பல வார்த்தைகள் ஒன்றாய்ச் சேர்ந்து, பொருள் கொடுக்கும் வாக்கியமாவது போல பலரும் சேர்ந்ததுதான் குடும்பம். குடும்பத்தில் 'நான்', 'என்' என்ற வார்த்தைகள் நுழைவதே இலக்கணக் குற்றம். ஆகவே "எங்கள்" குடும்பம் சிறப்பாக நடக்க என் கணவருக்கு நான் எவ்வாறு துணை போவேன் என்ற ரீதியில் கூறினால் நலமாக இருக்கும் என்று நம்புகிறேன். என்னிடம் குறைகளும் உண்டு. நிறைகளும் உண்டு. அது போலத் தான் எனக்குக் கணவராக வரப் போகிறவருக்கும் இரண்டும் இருக்கும். பெரியவர்கள் எங்களைச் சேர்த்து வைப்பதன் நோக்கம், அவருக்கு எவ்வளவு குறைகள் இருக்கிறது என்று நான் கணக்குப் போடவும், அவர் என் குறைகளைக் கணக்குப் போடவும் நான் பெரிதா, அவர் பெரிதா என்று சண்டை போடவும் அல்ல என்பதை நான் அறிவேன். ஆகவே எப்படிப்பட்ட கணவனையும் என்னை ஏற்றுக் கொள்ளும் கணவனை மதிப்பேன். அன்பு செலுத்துவேன்.

ஒரு ஆணிற்குச் சராசரியாக ஒரு மதிப்புப் போட்டு பெண் கொடுக்கும் வரதட்சணை, அவன் படிப்பு, வேலை என்று இவை மட்டுமே கணக்கிட்டு விட்டு குணம், கற்பு போன்றவை அடியோடு ஒதுக்கப்பட்டு, லாப நஷ்டக் கணக்குப் பார்த்து நடக்கும் நிதாசன வியாபாரத் திருமணங்களில் எனக்கு உடன்பாடு இல்லை. லாபமோ, நஷ்டமோ அனைத்திலும் இறுதிவரை என் கணவருக்கு துணை போவேன்.''

> **''அலுவலகத்தில் வேலை பார்க்கும் பெண்கள் அங்குள்ள சூழ்நிலைகளுக்கு, ஆட்களுக்கு அட்ஜஸ்ட் செய்து போவதில்லையா? அதைப் போலத்தானே குடும்பமும்?''**

ஓர் அலுவலகத்தில் வேலை பார்க்கப் போகும் பெண் அங்குள்ள சூழ்நிலைகளுக்கு, ஆட்களுக்கு அட்ஜஸ்ட் செய்து போவதில்லையா, அதைப் போலத்தானே குடும்பமும்? இங்கு மட்டும் நாங்கள் என்ன அடிமையா என்று ஏன் கத்துகிறார்கள் என்று தெரியவில்லை.

எங்கள் குடும்பத்தில் ஒவ்வொருத்தருக்கும் மதிப்புக் கொடுக்கப்பட வேண்டும் என்பதையே நான் விரும்புகிறேன். எப்பொழுதும் கலகலவென்று பேசிக் கொண்டு துருதுருவென்று அலையும் பல ஆண்கள் திருமணமானதும் அப்படியே மாறிவிடுவதைக் கண்டிருக்கிறேன். நான் எப்போதும் சிரித்த முகத்தோடு என் கணவரை உற்சாகப்படுத்தி ஊக்குவித்து அவரது எல்லாத் தேவைகளையும் கவனித்து எப்பொழுதும் அவருக்குத் தேவையாயிருக்கும் ஒரு தோழியாய் இருந்து குடும்பம் என்பது சிறுமைச் சுமை அல்ல, இன்பச் சுமை என்பதை உணர வைப்பேன். அநாவசியப் பிரச்னைகளால் அவரைப் போட்டுக் குழப்ப மாட்டேன். என்னைப்பொருத்தவரை நான்வெளிஅலுவலக வேலைகளுக்குச் செல்வதை வெறுக்கிறேன். ஒரே விதமான வேலைகளையே குடும்பத்தில் உள்ள எல்லோரும் செய்துவிட்டு பிற வேலைகளைச் செய்யாமல் விட்டு விடுவதில் எனக்கு உடன்பாடு இல்லை. குடும்பத்தில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு மாதிரி. அவர்களை ஒன்று சேர்க்க நாரின் வேலையை யாராவது செய்தால்தான் பூக்கள் ஒன்று சேர்ந்து மாலையாக முடியும். அவரவர் வேலையை அவரவர் செய்து கொண்டு ஒரே வீட்டில் தங்குவதில் என்ன இருக்கிறது? அதற்குத் தான் ஏதாவது ஹோட்டலில் தனித் தனியாகத் தங்கிவிட்டுப் போகலாமே.

சிறந்த குடும்பம் என்றால் அதில் உள்ள அத்தனை பேருக்குள்ளும் ஒரு சுமுகமான நட்பு இருக்க வேண்டும். எங்கள் குழந்தைகளையும் அவர்கள் வளர வளரத் தாயாக மட்டுமில்லாது ஒரு சிநேகிதியாகவும் இருந்து அவர்களை மனத்தாலும் உடலாலும் ஆரோக்கியமானவர்களாக வளர்ப்பேன். அவர்களுக்குக் குடும்பத்தின் மீது ஒரு பற்றையும் அன்பையும் ஏற்படுத்துவேன். அதுமட்டுமில்லாது பிறருக்கு உதவி செய்யும் குழந்தைகளாகவும், அநியாயத்தைக் கண்டால் எதிர்த்துப் போராடும் குழந்தைகளாகவும் அவர்கள் இருப்பார்கள். பஸ்ஸில் இரண்டு வயதுப் பையனை சீட்டில் உட்கார வைத்துக் கொண்டு, யாராவது கொஞ்சம் தள்ளி உட்காருங்களேன் என்றால், ''அவனுக்கும் சேர்த்துத்தான் டிக்கெட் வாங்கியிருக்கிறது'' என்று கூறும் பெண்ணாக, எழுந்து நிற்க முயற்சிக்கும் சிறுவனுக்கு ஒரு கிள்ளு கொடுத்து, ''பேசாமல் இடத்தில் உட்கார மாட்டாய்?'' என்று கூறும் தாயாக நிச்சயம் இருக்க மாட்டேன்.

மேலும், எங்கள் குடும்பம் பலருக்கும் உதவும் குடும்பமாகவும், எல்லோராலும் அன்பு செலுத்தப்படும் குடும்பமாகவும் இருக்கும். சமுதாயத்தோடு ஒட்டாத, அதன் நல்லது கெட்டதில் பங்கு ஏற்காத குடும்பமாக எங்கள் குடும்பம் நிச்சயம் இருக்காது.

**-அ. சோபனா ராஜிவி**
**சாயாபுரம், திருநெல்வேலி**



முதற்பரிசு பெற்ற கட்டுரை

## நான் கொடுத்துவைத்தவள்

**நா**னும் என் கணவரும் காதல் மணம் புரிந்து கொண்டவர்கள். 1978ல் வங்கியில்

வேலைக்குச் சேர்ந்த நான், வேலைகளைக் கற்றுக் கொள்ளத் துணையாக நாடியவரையே வாழ்க்கைத் துணைவராகவும் கொண்டேன். எங்கள் காதலுக்கு எதிரிகள் பற்பலர். காரணம்: நானோ பிராமணப் பெண். என் கணவரோ ஆதித் திராவிடர். என் பெற்றோர்கள் என் கணவரின் குண நலன்களில் திருப்தியுற்றிருந்தாலும், பிராமண சமூகத்திற்காக அஞ்சினார்கள். எனக்கு அடுத்ததாக மணம் முடிக்கும் பருவத்தில் என் சகோதரி இருப்பதால் தன் சமூகத்தார் எல்லாவிதங்களிலும் தங்களைப் புறக்கணித்து விடுவார்கள் என அஞ்சி எங்கள் திருமணத்துக்கு ஒப்புதல் அளிக்கவில்லை. இந்நிலையில் எங்கள் திருமணம், எங்களுடன் பணிபுரியும் சில நல்லிதயங்களாலும், என் கணவரின் பெற்றோர், உற்றோர், உறவினர்களாலும் மிகச் சிறப்பாகவே நடந்தது.

கணவன், மனைவி இருவரும் ஒரே கிளையில் பணி புரியக் கூடாது என்பது வங்கியின் விதியாகையினால் நாங்கள் திருச்சிக்கு மாற்றப்பட்டோம். திருமணத்தின்பொழுதே என் மாமியார் முதலானோர் என் கணவர் மிகவும் கோபக்காரர் என்று கூறியிருந்தாலும், முதன் முதலில் குடும்பம் ஆரம்பிக்கும்பொழுது எனக்கு மிகவும் அச்சமாக இருந்ததோடு, துக்கமாகவும் இருந்தது. காரணம்: வீட்டில் நான் மிகவும் செல்லப் பெண். எனக்கு எந்த வேலையும் செய்யத் தெரியாது. இங்கு ஊரும் புதியது. வேலைக்காரிகளை நம்பவும் கஷ்டமாக இருந்தது.

எங்கள் இருவருக்கும் காலை எட்டரை மணிக்கு அலுவலக நேரம். அதற்குள் நான் எல்லா வேலைகளையும் முடித்து என் கணவரை அனுப்பிவிட்டு நானும் கிளம்ப வேண்டும். வேலைக்காரி இல்லாததால் எல்லா வேலைகளையும் நானே பார்க்கும்படி நேரிட்டது. இந்நிலையில் கர்ப்பவதியானேன். இப்பொழுதுதான் பெற்றோர்களின் அருகாமை இல்லாதது எவ்வளவு துன்பமயமானது என்பதை உணர்ந்தேன். என் கணவரின் வீட்டாரோ எதிலும் (அது நல்லதானாலும் சரி கெட்டதானாலும் சரி) தலையிடமாட்டார்கள்.

நான் ஆக ஆக என்னால் முன் போல சுறுசுறுப்பாக வேலை செய்ய இயலவில்லை. மயக்கமும் வாந்தியும் வாட்டியது. என் கணவர் என் நிலையைக் கண்டு சிறிதும் கோபப்படாமல் தானே அதிகாலையில் எழுந்து பால் வாங்கி வைத்து, வெந்நீர் அடுப்பு மூட்டி என்று பெரும்பாலான வேலைகளையும்' செய்தார். தவிர தாயார் அருகில் இல்லையே இப்படி இருக்கின்றோர்களே என்று நான் கவலைப்பட்டு கண்ணீர் விடும்போதெல்லாம் என் கணவர் என்னை அணைத்துத் தாய்க்குத் தாயாக நான் இருக்கும்போது உனக்கு என்ன கவலை என்று தேறுதல் சொல்வார். சொல்வதோடு மட்டுமின்றி செய்தும் காட்டினார். நான் கேட்டதையெல்லாம் வாங்கிக் கொடுப்பார். நான் கண்ணீர் விட்டால் 'வளரும் குழந்தை நன்றாக இருக்க வேண்டாமா! அதனால் நீ எப்பொழுதும் சிரித்த முகத்தோடு இருக்க வேண்டும்' என்பார். என் கணவர் அசைவ உணவு விரும்பி உண்பார் என்றாலும் ஒருபோதும் என்னைச் சமைக்கச் சொல்லியோ சாப்பிடச் சொல்லியோ கட்டாயப்படுத்தியதில்லை.

வெள்ளிக் கிழமை எண்ணெய்க் குளியலுக்கு வெந்நீர் விளாவி வைப்பது முதல் எல்லா வேலைகளையும் செய்வார். சமயத்தில் எனக்குத் தலையும் தேய்த்து விடுவார். எனக்கு நன்கு அடர்ந்த நீண்ட கூந்தலானால் எண்ணெய் போகாமல் சில சமயங்களில் ஜுரம் வந்து விடும். ஆதலால் தானே தேய்த்து விடுவார்.

**''வேலைக்குப் போகும் பெண்ணாக இருந்தாலும் பத்தாயிரம் கொடுத்து பத்துப் பவுன் போட்டாலும், மண்ணெண்ணெயிலும், காஸிலும் மனைவிக்கு முடிவு கட்டும் இந் நாளிலும்...''**

இத்தனை கஷ்டங்களிலும் என்னுடைய பெற்றோர்களைப் பற்றி சிறு வார்த்தைகூட என் கணவர் தவறாகப் பேசியதே இல்லை. அது மட்டுமின்றி மாத மாதம் என் குடும்பத்திற்குப் பணம் அவர்கள் கேட்காமலே அனுப்பி விடுவார். என்னுடைய ஒரே சகோதரனுக்குக் கல்லூரியில் இடம் கிடைக்காததால் தபால் மூலம் பி. காம் படிக்கவும் எல்லாச் செலவுகளையும் தானே ஏற்றார்.

எங்களின் முதல் குழந்தை பெண்ணாகப் பிறந்தது. பெண் பிறந்துள்ளதே என்று நான் கலக்கமுற்றபோதும், பெண்தான் உயர்ந்தவள் என்று கூறினார்.

சுருங்கச் சொன்னால், என் கணவர்தான் எனக்குத் தெய்வமாக, தாயாக, தந்தையாக, தோழியாக எல்லா வகைகளிலும் இன்னும் இருந்து வருகிறார்.

வேலைக்குப் போகும் பெண்ணாக இருந்தாலும், 10,000 கொடுத்து 50 பவுன் போட்டாலும், மண்ணெண்ணெயிலும், காஸிலும் மனைவிக்கு முடிவு கட்டும் இந்த நாளிலும், ஓராயிரமும் எதிர்பாராது, தன் செலவில் வேறு ஜாதியைச் சேர்ந்த என்னை மணம் முடித்து என் பெற்றோர்களின் உதாசீனத்தைப் பொருட்படுத்தாமல், அவர்களுக்கு உதவி, என்னையும் கண்ணாகப் போற்றி வரும் இவரை இப்பிறவியில்

# வெற்றி வீரன்

அடிப்படை ஆரோக்கியம்
வெற்றியின் முதற்படி-



**உங்கள் குழந்தைக்கு
போலியோ சொட்டு மருந்து அளித்து
இளம்பிள்ளை வாத நோயிலிருந்து
பாதுகாப்பு அளித்திடுங்கள்.**

மருத்துவரின் மேற்பார்வையில் போலியோ
சொட்டுமருந்து, டிரிபிளாண்டிஜென்,
தட்டம்மை தடுப்பு ஊசியும் அளிக்கப்படும் இடம்:




**தமிழ்நாடு தாதா
பார்மாசூடிக்கல்ஸ் லிமிடெட்**

10, பத்மாவதியார் சாலை, ஜெய்பூர் நகர்
(ஆயிரம் விளக்கு மசூதி அருகில்)
சென்னை-600 086, தொலைபேசி 810646

ஞாயிறு : காலை 8.30 முதல் பகல் 12.30 வரை
புதன் : காலை 8.00 முதல் பகல் 10.00 வரை
சனி : மாலை 3.00 முதல் 6.00 வரை

madhu ads-248

மட்டுமல்ல, எப்பிறவியிலும் இவரையே கணவராக அடையப் பிரார்த்திக்கிறேன்.

-ஜனனி நாகையா
திருச்சி-6




முதற்பரிசு பெற்ற கட்டுரை

## கல்விக் கண்ணைத் திறந்தேன்

என் பெயர் சிவயோகம். சிறு வயதிலேயே தாய், தந்தையரை இழந்து, பிறர் ஏச்சுக்கு ஆளாகி பாட்டி வீட்டில் (அம்மாவின் அம்மா) வளர்ந்தேன். முறை மாப்பிள்ளையான என் கணவரைக் கல்யாணம் செய்து கொண்டேன். இவர் பெயர் வரதராஜன். நெல்லிக்குப்பம் கரும்பு ஆலையில் 72 ரூபாய் சம்பளத்தில் வேலை. படிப்பு எஸ். எஸ். எல். சி. தான். இந்த 72 ரூபாய் சம்பளத்தில் நான், என் கணவர், என் நாத்தனார், மச்சினர், இருவர், மாமியார், அவர் அம்மா, இத்தனை பேரும் இவர் ஒருவர் சம்பளத்தில் சாப்பிட வேண்டும். ரொம்பவும் கஷ்டப்பட்டுக் குடும்பம் நடத்தி வந்தோம். இதில் எனது பாட்டி கொஞ்சம் உதவி செய்து வந்தார்கள். இந்தக் கஷ்டத்தில் அடுத்தடுத்து நான்கு குழந்தைகள் பிறந்து விட்டன. நான்கும் ஆண் குழந்தைகள். வளர்க்க ரொம்பக் கஷ்டப்பட்டேன். பொருளாதாரம் இடம் கொடுக்கவில்லை. என் கஷ்டத்தைப் பார்த்து பாட்டி மூத்த இரண்டு குழந்தைகளை எங்கள் சொந்த ஊரான காட்டுமன்னார் குடிக்கு அழைத்துப் போய் ஸ்கூலில் சேர்த்தார்கள். என் மனத்தில் சதா நல்ல ஸ்கூலில் சேர்த்துப் படிக்க வைக்க முடியவில்லையே என்று ஏக்கம். ஆனால் அந்த சாதாரண ஸ்கூலில் படித்தே இரண்டு பேரும் முதலில் வந்தார்கள்.

எஸ். எஸ். எல். சி. வரையில் எப்படியோ பெரியவன் படித்து முடித்தான். இதற்குள் என் நாத்தனார், மைத்துனர் யாவருக்கும் கல்யாணம் முடிந்து, எனது மாமியார் அம்மாவும் இறந்து, நாங்கள் கொஞ்சம் நிம்மதி அடைந்தோம். அதற்குள் பையனைக் காலேஜில் சேர்க்க வேண்டிய நிலைமை வந்து விட்டது. திருச்சி செயின்ட் ஜோஸப் காலேஜுக்கு அப்ளிகேஷன் போட்டோம். இவன் மார்க்கைப் பார்த்து உடன் அட்மிஷன் கிடைத்து விட்டது. கடன் உடன் வாங்கிச் சேர்த்து விட்டோம்.

பி. யு. ஸி. கிளாஸ் எடுத்து பாஸ் பண்ணினான். இன்ஜினியரிங் படிக்கணும் என்றான்.

முதல் வருஷம் காலேஜ் பீஸ், ஹாஸ்டல் பீஸ் எல்லாவற்றுக்கும் என்னுடைய நகையை விற்றுப் படிக்க வைத்தோம். அடுத்த வருஷம் இரண்டாவது பையன் எஸ். எஸ். எல். சி.யில் நல்ல மார்க் எடுத்து பாஸ் பண்ணினான். அவனை விவேகானந்தா காலேஜில் எந்த சிபாரிசும் இல்லாமல் சேர்த்துக் கொண்டார்கள். ஆனால் இருவருக்கும் காலேஜ் பீஸ், ஹாஸ்டல் பீஸ் அனுப்புவது எங்களால் முடியாத காரியம். ஆகையால் யோசனை பண்ணி மயிலாப்பூரில் ஒரு சின்ன வீடு வாடகைக்கு எடுத்து மற்ற இரண்டு பையன்களையும் பெண்ணாத்தூர் சுப்பிரமணியர் ஹைஸ்கூலில் சேர்த்தோம். பெரிய பையன்களும் வீட்டில் இருந்தபடியே காலேஜ் செல்ல ஆரம்பித்தார்கள். என் கணவர் நெல்லிக்குப்பத்தில் ஹோட்டலில் சாப்பிட்டால் செலவு அதிகம் ஆகும் என்று தானே சமைத்துச் சாப்பிட்டார். இதற்குள் எங்கள் உறவினர்கள் யாவரும் படிப்புக்காகச் சென்னையில் குடிவைத்தது வீண் செலவு. இங்கெல்லாம் காலேஜ் இல்லையா விரலுக்குத் தகுந்த வீக்கம் வேண்டாமா? அதிகப்படியாகப் பெரிய படிப்பெல்லாம் ஏன் 'படிக்க வைக்கணும்' என்று மாற்றி மாற்றிப் பேச ஆரம்பித்தார்கள். என் பாட்டியையும் 'வீண் பெரிசில் சென்னை சென்றார்கள் உதவி செய்யாதே' என்று தடுத்தார்கள்.

நானும் என் கணவரும் எல்லாவற்றையும் சகித்துக் கொண்டு பையன்களை முன்னுக்குக் கொண்டு வருவதே குறியாக இருந்தோம். பணத்துக்கு ரொம்பவும் கஷ்டப்பட்டோம். இந்தக் கஷ்டத்திலேயே இரண்டாவது பையன் பி. யு. ஸி. நல்ல மார்க் எடுத்துப் பாஸ் பண்ணி விட்டான். இவனுக்கும் மார்க்கும், கிளாஸும் இருந்ததால் விவேகானந்தாவிலேயே பி. காம் கொடுத்துவிட்டார்கள். எங்களால் பணக் கஷ்டம் தாங்க முடியவில்லை. கூடியவரை என்ன விற்கக் கூடிய பொருள்களோ அவ்வளவையும் விற்று

விட்டோம். திருமாங்கல்யத்தைத் தவிர பாக்கி பூரா நகைகளையும் விற்றுவிட்டது.

மூன்றாவது பையன் எஸ். எஸ். எல். சி. பாஸ் செய்து விட்டான். அவனுடைய சுமாரான மார்க்குக்குக் கந்தசாமி காலேஜில் பி. யு. சி. கிடைத்தது. இனி நகையும் இல்லை. இந்த வருஷம் எப்படித் தள்ளுவது என்ற நிலை வந்து விட்டது. உறவினர்கள் பேசுவதற்கு இடம் ஆகிவிடுமே என்று பயந்து விட்டோம். என்னுடைய பாட்டி எனக்குக் கொஞ்சம் நிலம்,

> ''சாதாரணமாகப் போனுல் கூடப் பணம் கடன் கேட்கத்தான் வந்து விட்டோம் என்று உறவினர்களும் நண்பர்களும் முகம் கொடுக்க மாட்டார்கள்.''

வீடு எழுதி வைத்திருந்தார்கள். அது அவருக்குப் பிறகுதான் எனக்கு வரும். நான் பாட்டியிடம் சென்று ஒரு வாரம் அவர்களுக்கு எடுத்துக் கூறிச் சமாதானம் செய்து அவர்களைச் சம்மதிக்க வைத்து இரண்டையும் விற்று ரூ. 30,000 கொண்டு வந்தேன்.

உறவினர்கள் எல்லாம் பாட்டியிடம் போய் 'எப்படி விற்றுக் கொடுத்தாய்? அதையும் எடுத்துப் போய் சென்னையில் அழிக்கப் போகிருர்கள்' என்று சொல்லிக் கொடுத்து பாட்டி பணத்தைக் கேட்க வந்து விட்டார். என்ன செய்வது என்று புரியவில்லை. கற்பகாம்பாளிடம் போய் முறையிட்டு அழுதேன். கோவிலில் இருந்து வீட்டுக்கு வந்தால் என் கணவரின் நண்பர் பாட்டியிடம் எடுத்துச் சொல்லி உங்கள் பணத்தைக் கடனுகக் கொடுத்ததாக இருக்கட்டும். அந்தப் பணத்திற்குத் தவணை முறையில் ஒரு வீடு வாங்கிக் கொடுத்து விடுகிறேன் என்று சொன்ன பிறகு பாட்டி சமாதானமாகி ஊர் போய்ச் சேர்ந்தார். பாக்கி இருக்கும் தொகையை வைத்து இருவரையும் படிப்பை முடிக்க வைத்து மூன்றாவது பையனை பி.எஸ்.ஸி. கெமிஸ்ட்ரியில் சேர்த்துக் கடைசிப் பையனை பி. யூ. ஸி.யில் சேர்த்தோம்.

பி. டெக்கில் மூத்த பையன் நல்ல கிளாஸ் எடுத்ததில் கல்கத்தா எம். பி. ஏ.வில் இடம் கிடைத்து விட்டது. அடுத்தவன் பி. காமில் கிளாஸ் எடுத்ததில் ' சி. ஏ.வில் இடம் கிடைத்தது. கடைசிப்பயன் பி. ஏ. டிபன்ஸில் சேர்ந்து விட்டான். மறுபடியும் பணக் கஷ்டம் ஆரம்பமாகி விட்டது.

அதற்குள் என் கணவருக்கு 900 ரூபாய் சம்பளம் ஆனது. துணிந்து கல்கத்தா அனுப்பி விட்டோம். மெரிட் ஸ்காலர்ஷிப் கிடைத்தது. லோன் போட்டுப் பணம் வாங்கினேம். கடன் கொஞ்சம் கொஞ்சமாக 50,000 வரைக்கும் இந்த நான்கு பையன்கள் படிப்பை முடிப்பதற்குள் வாங்கி விட்டோம். கடன் வாங்கினலும் எல்லோரும் இனிதாகப் படித்து முடித்து விட்டார்கள். நாங்கள் பட்ட கஷ்டம் யாருக்கும் வரக் கூடாது என்று வேண்டிக் கொள்வோம். இப்பொழுது பையன்கள் கொஞ்சம் கொஞ்சமாகக் கடனை அடைக்கிறுர்கள். பெரிய பையன் சேதுராமன் கோவாப்டெக்ஸில் மார்க்கெட்டிங் மானேஜர். இரண்டாவது பையன் செந்தில்நாதன் அட்வர்டைசிங் கம்பெனியில் ஆடிட்டர். மூன்றாவது பையன் அருளாளன் பவுடர் கம்பெனியில் கெமிஸ்ட்டாக இருக்கிறுன். நான்காவது பையன் முத்துக்குமாரன் ப்ளேட் ஓட்டுவது. என்.சி.சி.யில் மூன்று ஸ்டார். பாக்ஸிங், ஸ்போர்ட்ஸ் மேன். எல்லா விளையாட்டிலும் முதலில் வந்து. வீடு நிறைய டாலரும், கப்பும்.

நாங்கள் பட்ட கஷ்டத்துக்குக் கைமேல் பலன். இப்பொழுது அதே உறவினர்கள் அவர்கள் இருவரும் புத்திசாலிகள், எப்படியோ கஷ்டப்பட்டுப் பையன்களைப் படிக்க வைத்து முன்னுக்குக் கொண்டு வந்து விட்டார்கள் என்று புகழுகிறுர்கள். அதைக் கேட்டு நாங்கள் இருவரும் சிரித்துக்கொள்வோம். இப்பொழுது எல்லோரும் சேர்ந்து கடனை அடைத்து வருகிறேம்.

## தேமல் போன விதம்

தேமல் உள்ளவர்கள் நாட்டு மருந்துக் கடைகளில் இருக்கும் ''பேயரத்தை வேர்'' என்ற மருந்துப் பொருளை வாங்கி நீர் விட்டு மாவு போல் அரைத்து தேமல் உள்ள இடங்களில் பத்தாகப் பூசி ஒரு மணி நேரம் கடந்து சுடுநீரில் கழுவி வர மூன்றே தினங்களில் தேமல் காற்றுக் கண்ட பஞ்சாகப் பறந்து விடும் என்கிறுர்கள்.

—சாக்கை பொன்னழகு

ஆண்டவன் விருப்பம் இருந்தால் எங்களைப் போல வசதி இல்லாத குழந்தைகளும் படித்து முன்னுக்கு வரலாம். எல்லாரிடமும் கடன்காரர்கள் என்றும், வக்கில்லாதவர்கள் என்றும் பெயர் வாங்கினேம். சாதாரணமாகப் போனுல் கூடப் பணம் கடன் கேட்க வந்து விட்டோம் என்று உறவினர்களும், நண்பர்களும் முகம் கொடுக்க மாட்டார்கள். இன்று வலுவில் வந்து பேசுகிறுர்கள். நீ நான் என்று பெண் கொடுக்கவும் வருகிறுர்கள். இதுதான் உலகம்!

—வி. சிவயோகம்
நெல்லிக்குப்பம்

# போட்டோ நியூஸ்



◆ இளம் வயதிலேயே சிறப்புமிக்க இரண்டு விருதுகளைப் பெற்றுள்ளார் கோவையைச் சேர்ந்த டாக்டர் குமாரி நந்தினி தேவி. ரோட்ராக்ட் கெமிடோ கிளப் வழங்கிய 'டாய்ப்' அவார்டும், அபெக்ஸ் கிளப் வழங்கிய 'அபெக்ஸ் ஆக்ஸன் விருது'ம் இவர் திறமைக்குச் சான்று கூறுகின்றன.

கோவை மருத்துவக் கல்லூரியில் படித்த இப்பெண்மணி இரண்டு தங்க மெடல்களையும் பெற்றுள்ளார். குழந்தை நல மருத்துவத்தில் இவருக்கு நல்ல ஆர்வம் உள்ளது.



◆ துளுவ-வேளாளர் சங்கம் சமீபத்தில் சென்னையில் ஒரு சுயம்வரத்தை நடத்தியது. இச்சங்கத்தில் திருமணத்திற்காகப் பதிவு செய்திருந்த ஆண்கள் பெண்களை வரவழைத்து நேருக்கு நேர் பேசச் செய்தனர். ஒருவருக்கொருவர் பிடித்திருந்தால் திருமணம் நிச்சயிக்கப்படும் என அறிவித்திருந்தனர். ஏராளமான பேர் கலந்து கொண்ட இவ்விழாவில் பல திருமணங்கள் நிச்சயிக்கப் பட்டனவாம். டாக்டருக்குப் படித்த பெண்கள் கூட ஆர்வத்துடன் கலந்து கொண்டனர்.

—கே. தியாகராஜன்



◆ கல்வித் துறையில் பல சாதனை களைப் புரிந்துள்ள ஆதர்ஷ் வித்யா லயா மீண்டும் ஒரு வெற்றியைப் பெற் றுள்ளது. ஆமாம், அப்பள்ளியின் மாணவி குமாரி கலா ப்ளஸ் டூவில் 95.4 சதவித மதிப்பெண்களைப் பெற்று மாநிலத்திலேயே இரண்டாவதாக வந் துள்ளார். பத்தாவது வகுப்பில், மாநிலத்தில் முதலாவதாக வந்தவர் இவர்.







◆ ''இன்றைக்கு வீட்டுக்குத் தேவை யான ஸ்டோன்வேர் பைப்பிலிருந்து சமையலறை ஜாடி வரை பார்த்து செலக்ட் செய்து வாங்கும் பொறுப் பைப் பெண்கள்தான் ஏற்றிருக்கிறார்கள் அதனால்தான் அவர்களைக் கவரும்வகை யில் பத்து வித வண்ணங்களில் தரமான முறையில், கண்ணைக் கவரும் டிஸைன்களில் எங்கள் நிறுவனப் பொருட்களைத் தயாரிக்கிறோம்''

என்கிறார் டாசெல் நிறுவனத்தின் மானேஜிங் டைரக்டர் திரு வரத ராஜன், ஐ.ஏ.எஸ். தமிழ் நாடு செரா மிக்ஸ் லிமிடெட் (டாசெல்) அண்மை யில் மாம்பலத்தில் ஒரு கண்காட் சிக்கு ஏற்பாடு செய்திருந்தது. ஏராள மான பெண்கள் ஜாடிகள், சிறுக் கோப்பைகள், அழகிய கலைப் பொருட்கள் இவற்றை ஆர்வத்தோடு வாங்கிச் செல்வதைப் பார்க்க முடிந் தது.

''பெண்களைக் கவரும் வண்ணம் புதிய முயற்சி ஒன்றில் ஈடுபட்டுள் ளோம். டைனிங் டேபிளில் அழகாக அடுக்கி வைக்கவும், பரிமாறவும் தக்க வகையில் சிறிய சிறிய பீங்கான் கிண் ணங்களைத் தயாரிக்கப் போகிறோம். ஒரு டைனிங் டேபிளின் அனைத்துத் தேவை களையும் பூர்த்தி செய்யும் வகையில் அவை இருக்கும். மிக விரைவில் இவை மார்க்கெட்டுக்கு வரப் போகின் றன''

என்றார் இந்நிறுவனத்தின் சேல்ஸ் மானேஜர் திரு அந்தோணி.



# இவர்களும் மனிதர்கள் தான்!

சில குழந்தைகள் வயதுக்கு மீறிய அறிவுடன் 'வெடுக் வெடுக்' என்று பேசி, துறு துறுவென்று அலைந்து கண்ணனுக் குறும்புத்தனம் செய்யும்போது அவர்கள் பெற்றோர்கள் பெறும் மகிழ்ச்சிதான் என்ன? கண்கள் குறிப்பாக எதையும், யாரையும் பார்க்காமல், முறையாகப் பேசாமல், உட்கார்ந்தால் உட்கார்ந்தபடி, பிறரால்கேலி பேசும்படி சில குழந்தைகள் இருக்க பார்த்துப் பார்த்துக் கண்ணீர் வடிக்கும் பெற்றோரின் தவறுதான் என்ன?

மஞ்சுளா ரமேஷ்



உருண்டு முகம் கொண்ட அந்தப் பன்னிரண்டு வயதுச் சிறுமி பட்டுப் பாவாடையும் சட்டையுமாக மிகவும் அழகாக இருந்தான். அருகில் சென்று முகத்தை நிமிர்த்திப் பார்த்தால் — கடவுளே, இது என்ன சோதனை?

நிலையில்லாமல் அங்குமிங்கும் அலையும் பார்வை, வாய் ஒரு பக்கமாகக் கோணிக் கோணி, அவள் செய்யும் சேஷ்டைகள்... க்கா, க்கா என்று ஏதோ பிதற்றும் வாய். பார்த்தவுடனேயே தெரிகிறது—

இவள் மூளை வளர்ச்சி குறைந்த சிறுமியென்று.

இப்படி ஒன்று, இரண்டா, ஏராளமான குழந்தைகள், பார்க்கும் நமக்கே வயிற்றைக் கலக்குகிறது என்றால், பெற்ற தாய் தந்தையர்க்கு எப்படிக் கூறும்? இவர்கள் மட்டுமல்ல, இந்தியாவில் லட்சக் கணக்கில் இப்படிப்பட்ட மூளை வளர்ச்சி குன்றிய சிறுவர், சிறுமியர், பெரியவர்கள் இருக்கிறார்கள். நாளுக்கு நாள் இவர்களின் சதவிதம் வளர்ந்து கொண்டு இருக்கிறது என்பதுதான் இதில் உள்ள கொடுமையான விஷயம்.

'பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும்' என்பது எல்லோரும் சொல்லும் விஷயம். 'பிறக்கும்போது ஆண்டவன், எல்லோர்க்கும் ஒரே மாதிரியான மூளையைத்தான் வைக்கிறான்' என்பார்கள். அப்படியானால் வளரும் போது எனிந்த பேதம்?





தாம்பரம் அருகில், சந்தோஷபுரத்தில் மூளை வளர்ச்சி குறைந்தவர்களுக்கெனவே விரிந்த பரப்பில், **'ஜி. டி. போவாஸ் மெமோரியல் ஸ்கூல்'** வைத்து அவர்களின் புனர் வாழ்வுக்குப் பாடுபடும் மனோ தத்துவ நிபுணர் **திரு போவாஸை** அணுகியபோது—

''இப்படி மூளை வளர்ச்சி குன்றிக் குழந்தைகள் பிறக்க அல்லது வளரும்போது வளர்ச்சி ஏற்படாமல் இருக்க ஏராளமான காரணங்கள் இருக்கின்றன. இவர்களின் வாழ்க்கைக்குத் தாய்மார்கள்தான் பெரும் பொறுப்பையும் ஏற்க வேண்டியுள்ளது. குழந்தை கருவில் உருவானவுடனேயே அவர்களுடைய பொறுப்பு ஆரம்பித்து விடுகிறது. எப்படி என்று விளக்குகிறேன்.

கர்ப்பமாக இருக்கும் பெண்கள், தாங்கள் ஓர் உயிரைத் தாங்கி யிருக்கிறோம் அதை முழுமையாகப் பாதுகாத்து, ஒரு சேதமும் இல்லாமல் உலகுக்குக் கொணர வேண்டும் அது தங்கள் கடமை என்பதை உணர வேண்டும். அதற்காகச் சத்துள்ள ஆகாரம் தேவையான உடலுழைப்பு, நோய் ஏற்படுத்திக் கொள்ளாமல் இருத்தல் எனத் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும்.

சத்துள்ள ஆகாரம் தாய் சாப்பிட்டால் தான் குழந்தை சரியாக வளருவதற்கும் தேவையான சத்துக் கிடைக்கும். சத்துணவின்மையால் மூளை மந்தமாகி, உடல், மன வளர்ச்சி இல்லாமல் போய்விடுவது என்பது நம் நாட்டில் மிக அதிகம். ஏழை நாடான இந்தியாவில் லட்சக் கணக்கான குழந்தைகள் இப்படி இருக்கிறார்கள்.

தவிரவும், குழந்தையின் ஐந்து வயது வரையிலான பருவம் மிக முக்கியமான பருவம். அப்போதுதான் குழந்தையின் மூளை வளர்ச்சி படைகிறது. அப்போது பெறும் சத்துக்களைப் பொறுத்தே குழந்தைகளின் வளர்ச்சி அமைகிறது.

அடுத்தது, கர்ப்பிணிகள் தேவையான உடலுழைப்போ, அல்லது உடற் பயிற்சியோ மேற்கொள்ள வேண்டும். அப்போதுதான் பிரசவம் எளிதாக அமைகிறது. பிரசவம் சிக்கலாகி விடும்போதுதான் குழந்தையை வெளியே எடுக்கப் பல முயற்சிகளை மேற்கொள்ள வேண்டியதாகிறது. ஆயுதம் போட்டுக் குழந்தையை எடுக்கும்போது அது மூளையைப் பாதித்து விடுவதும் உண்டு. அதனால்தான் எளிதான பிரசவத்திற்குத் தன்னைத் தயார்ப்படுத்திக்கொள்வது நல்லது என்கிறேன்.

அடுத்து தொற்று நோய் எதுவும் வராமல் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். சக்தி வாய்ந்த மருந்துகளைச் சாப்பிடவேண்டிய மலேரியா, டைபாய்டு போன்ற நோய்கள் வந்து விட்டால் போதும். அந்த மருந்துகள் குழந்தைகளைப் பாதிக்கும். எனவே அவற்றிலிருந்து தன்னைக் காத்துக் கொள்ள வேண்டும்.....''

என்று மள மள வென்று சொல்லிக் கொண்டே சென்றார் திரு போவாஸ். அவர் மேலும் சொன்ன சில காரணங்கள் மிகவும் சிந்திக்க வேண்டியவை.

கர்ப்பம் தரித்திருக்கும்போது சில சமயம் தடுக்கிக் கீழே விழுவதுண்டு. அல்லது மின்சார 'ஷாக்' அடிக்கலாம். இவைகூடக் கருவில் உள்ள குழந்தையைத் தாக்கி மூளையில் அடிபடுமாம்! அதே போல மற்றொன்று மிக முக்கியமானது.

இன்றைக்குப் பல பெண்களுக்கு மருந்து-மாத்திரைகளைப்பற்றித்தெரிந்திருக்கிறதுமுழுமையாகத் தெரிந்திருந்தால் பரவாயில்லை. ஓரளவு அவற்றைத் தெரிந்து வைத்துக் கொண்டு கையாளும்போதுதான் பயங்கரமான விளைவுகள் ஏற்படுகின்றன.

திருமண வேளை கூடிவரும் பெண்களுக்கு, சரியாக அந்த நாட்களுக்கு மாத விலக்குக்கு நாளாக ஏற்பட்டு விடும். சத்திரம் கிடைப்பதே குதிரைக் கொம்பாக இருக்கும் இந்நாளில் இதற்காகத் தள்ளிப் போட முடியுமா திருமண நாளை? மாத விலக்கைத் தள்ளிப் போடுவதுதான் எளிதாயிற்றே! கடைக்குச் சென்று மாத்திரைகளை வாங்கிப் போட்டுக் கொண்டு விடுகிறார்கள். திருமணமும் தடையின்றி முடிகிறது. முடிந்தவுடனேயே கருவுறும் பெண்கள்தான் மிக அதிகம். கல்யாணமானவுடனேயே மருமகள் கருவுற்றாள் என்றால் ஏக சந்தோஷம் தான். அவளுக்கும் முன்பு கருப் பையைத் தாக்கி அதன் செயல் முறையைப் பாதிக்கத் தான் சாப்பிட்ட மாத்திரையைப் பற்றி நினைவிருக்காது. ஆனால்—

குழந்தை குறை மாதத்தில் மிகக் கஷ்டப் பிரசவத்தில் பிறக்கலாம். அல்லது சரியான மாதத்தில் பிறந்தாலும் போட்டது போட்டபடி இருக்கும். கை கால் அசைக்காது. இது 'மூளை வளர்ச்சி குன்றிய குழந்தை' என டாக்டர்களால் அறிவிக்கப்படும்.

இப்படிப்பட்ட நிலையை எப்படித் தவிர்ப்பது? திருமணத்தின்போது மாத விலக்கிற்கு நாளாக இருந்தால் மாத்திரை போட்டுக் கொள்ளலாம். ஆனால் அதன் தீமையைப் புரிந்து கொள்ள வேண்டும். மீண்டும் ஒரு முறை மாத விலக்காகி மாத்திரையின் சக்தி போகும் வரை கருவுறாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். ஒரு முறை மாத விலக்காகி விட்டால் அடுத்த தடவைக்குப் பரவாயில்லை.

**சரியான நிலையில் கருத்தரித்து, குழந்தையும் நல்ல முறையில் பிறந்தாலும் சில சமயம் வளரும் நிலையில் மன வளம் குன்றிப்போய் விடுகிறதே!**

''குழந்தை வளரும்போது ஏற்படும் விபத்துத்தான் இதற்கு முக்கிய காரணம். சாதாரணமாக முன் காலத்தில் வீட்டில் பெரியவர்கள் இருப்பார்கள். குழந்தைகளைப் பத்திரமாகப் பார்த்துக் கொள்வார்கள் இன்றைக்கு அந்தக் கூட்டுக் குடும்பம் நிலை மாறி, தனிக் குடும்பம் வந்துவிட்டது. அதிலும் கணவன் மனைவி இருவருமே வேலைக்குப் போக வேண்டிய நிலையில், இவர்கள் வேலைக்காரி மேல் சார்ந்திருக்க வேண்டியவர்களாகிறார்கள்.

வேலைக்காரி சிறு குழந்தையைத் தூக்கும் போது கீழே போட்டுவிட வாய்ப்புண்டு. மண்டையில் அடிபடும் குழந்தையும் சிறிது நேரம் அழுதுவிட்டுத் தூங்கப் போய்விடும்.

ஆனால் தூங்கி எழுந்த குழந்தை முன்பு போல் துறுதுறுவென்று அலைவதோ, சிரிப்

பதோ இருக்காது. வேலைக்காரி சொல்வாளா நான் குழந்தையைக் கீழே போட்டு விட்டேன் என்று? அவளுக்கு அதன் தீவிரம் தெரியாமல் கூடப் போகலாம். ஆக நல்ல குழந்தையைப் பெற்றவர்கள் மூளை வளர்ச்சி குறைந்த குழந்தையைக் காலமெல்லாம் பாதுகாக்க வேண்டிய நிலைமைக்குத் தள்ளப் படுகிறார்கள்.

சிறுவர்களின் விளையாட்டுக்களிலும் இது போல கீழே விழுவது, மண்டையில் அடிபட்டு, மூளை பாதிக்கப்படுவதுண்டு. ஏன், பெரியவர்கள் ஆன பிறகு விபத்துக்களினாலே மூளை பாதிக்கப்படுவதுமுண்டு.

பெரியவர்களைப் பொறுத்த வரையில் இந்த வகையிலே இன்னொரு விச்சிரமான மனோ வியாதியும் உண்டு. மூளை நோய் (Mental Illness) என்று இதைச் சொல்லுவார்கள்.

விழும் வேப்பம் பூக்களைச் சேமியுங்கள். இது சிறந்த மருந்துப் பண்டம். வயிற்று உப்புசம், வாய்ப் பித்தம், இவற்றை நீக்க உதவும். நல்ல நெய்யில் ஒரு பிடி வேப்பம் பூவைப் பொன் முறுகலாக வறுத்து எடுத்துக் கொள்ளவும். துளி பெருங்காயம், ஒரு மிளகாய் வற்றல் இவற்றைத் தனியாக வறுத்துப் பொடி செய்து உப்பும் சேர்த்து வேப்பம் பூவுடன் கலக்கவும். சூடான சாதத்தில் பிடித்துச் சாப்பிடுங்கள். குழந்தைகளும் சாப்பிடுவார்கள். துளிக் கூடக் கசக்காது.

—ரோஜி

வாழ்க்கையில் ஏற்படும் பிரச்னைகளைச் சந்திக்கத் திராணி இல்லாமல் பின்வாங்கி விடுவது. தோல்விகளைக் கண்டு ஒரேயடியாக ஓடிவிடுவது. பின்னுக்கியே ஓடி ஓடி கடைசியில் கருவில் குழந்தை இருக்கும் நிலையில் கையைக் காலை மடக்கிக் கொண்டு உட்கார்ந்து விடுவார்கள். அதுதான் மிகவும் பத்திரமான, எதுவும் தன்னைப் பாதித்துவிடாத நிலை என்பது அவர்களின் எண்ணம்.

அதனால் குழந்தைகளை வளர்க்கும் தாய்மார்கள் அவர்களுக்குத் தைரியம் சொல்லி, வாழ்க்கையில் எந்தப் பிரச்சினை வந்தாலும் கலங்காத நிலையில் வளர்க்க வேண்டும். இப்படிப்பட்ட மூளை நோய் உடைய பலரையும் அந்த சந்தோஷபுரத்தில் பார்க்க முடிந்தது. அவர்கள் தங்கள் கைகளை அசைப்பதற்குக் கூடச் சோம்பேறித்தனப்பட்டு போட்டது போட்டபடி இருக்கிறார்கள். வாழ்க்கையில் எதற்குமே பிரயோஜனப்படாமல் போய் விட்ட சமுதாயப் பரிதாபங்கள் இவர்கள்...

சரி, இத்தனை ஜாக்கிரதைகளையும் மீறி ஒரு குழந்தை மூளை வளர்ச்சி குன்றிய குழந்தையாகப் பிறந்து விடுகிறது. இப்போது பெற்றோரின் கடமை என்ன?

''பிறந்த குழந்தையின் வளர்ச்சியைக் கண்காணிப்பது ஒவ்வொரு தாயினுடைய கடமையாகும். பிறந்த கணம் குழந்தையைத் தலை கீழாக்கிப் புட்டத்தில் அடித்து 'வீல்' என்று அழச் செய்கிறார்கள். அந்த அழுகை என்னும் ஆரம்பத்தில் இருந்து, மூன்றாவது மாதம் பார்வையை நிலைநிறுத்தி குப்புறப் புரள முயலுகிறதா எனப் பார்க்க வேண்டும். தவழுதல், உட்காருதல் நடத்தல், பேசுதல் என அதனதன் சமயத்தில் அந்தந்தச் செயல்கள் நடக்கிறதா எனக் கவனிக்க வேண்டும். சந்தேகம் வரும் கட்டத்தில் மருத்துவரை அணுக வேண்டும்.

மூளை வளர்ச்சி குறைந்த குழந்தையாக இருந்தால் பார்த்த உடனேயே தெரிந்து கொள்ளலாம். மூளை சேதப்பட்டு விட்ட இவர்களைச் சாதாரண குழந்தையாக மாற்ற முடியாது. அதற்குப் பதிலாக ஓரளவு முன்னேற்றமுள்ள குழந்தையாக்கலாம். அதற்கென மாத்திரைகள், மருந்துகள் உள்ளன. அவற்றைக் கொடுப்பதன் மூலம் கொஞ்சம் முன்னேறச் செய்யலாம்.

கிராமங்களில் அநேகமாக இது போன்ற குழந்தைகளைத்தான் மாடு மேய்க்கும் சிறுவர்களாக ஆக்குகிறார்கள். நகரங்களில் ஹோட்டல்களில் எடுபிடி வேலை செய்யும் சிறுவர்களும் இந்த நிலையில் இருப்பவர்களே. இவர்களுக்கு ஒரு வேலையை, ஒரு சூழ்நிலையில் செய்யச் சொல்லிக் கொடுத்தால் அதையே தான் செய்து கொண்டிருப்பார்கள். அதை மாற்றிச் செய்யவோ, இன்னும் நன்றாகச் செய்யவோ தெரியாது. இதைப் போல ஒவ்வொரு பெற்றோரும் அவர்களை முழுமையாக ஒதுக்கி விடாமல் சிறு சிறு வேலைகளை அவர்களுக்குப் பழகிக் கொடுக்கலாம்.

ஆனால் இன்றைய நடைமுறை வாழ்க்கையில் கணவன் மனைவி இருவருமே வெளியே போகிறவர்களாகவோ அல்லது ஊர் மாற்றி ஊர் செல்பவர்களாகவோ சிறு ஃப்ளாட்டில் வசிப்பவர்களாகவோ இருக்கிறார்கள். இவர்கள் தங்களுடனேயே இந்தப் பிரச்னைக் குழந்தைகளை அழைத்துச் செல்ல முடிவதில்லை. இங்கேதான் எங்களைப்போன்றவர்கள் நுழைகிறார்கள்.

இந்த மாதிரியான சிறுவர், பெரியவர்கள் தங்குவதற்கும், சாதாரண வேலைகளைச் செய்வதற்கும் நாங்கள் சொல்லித் தருகிறோம். பெரியவர்கள் இவர்களை வந்து வேண்டும்போது பார்க்கலாம். இவர்களும் விரும்பும்போது அவர்களுடன் கொஞ்ச காலம் இருக்கலாம்....''

'' 'பிரச்னைக் குழந்தைகள்' என்று இவர்களைச் சொல்கிறீர்களே ஏன்? இவர்களும் பைத்தியங்களைப் போல அடிப்பார்களா?

அப்படியானால் பைத்தியத்திற்கும் இவர்களுக்கும் என்ன வேறுபாடு?

''பைத்தியங்கள் மனநிலை பாதிக்கப்பட்டவர்கள். அவர்கள் சதா சர்வ காலமும் அட்டகாசம் செய்து கொண்டு இருப்பார்கள் ஆனால் இவர்கள் மூளை வளர்ச்சி குன்றியவர்கள். சாதாரண மனிதர்களுக்கு 'மூடு' கெடுவது போல இவர்களுக்கும் சில சமயம் மூடு கெட்டுவிடும். வீட்டில் மற்றவர்கள் அல்லது கூட உள்ள சிறுவர்கள் இவர்களைக் கேலி செய்து சீண்டுவார்கள். இல்லையென்றால் கொடுத்த வேலையை ஏன் செய்ய வேண்டும் என்று கோபம் வரலாம்.

இந்த மாதிரி மூடு வரும்போது சாதாரண மனிதர்கள் மனமுதிர்ச்சியினால் உணர்ச்சிகளை அடக்கிக் கொள்ளுவார்கள். இவர்களுக்கு அந்த முதிர்ச்சி கிடையாதாகையால், 'ஓ' என்று கத்தி ஆர்ப்பாட்டம் செய்து, மற்றவர்களை அடித்து, கிள்ளுவார்கள்.

அதுவே இல்லை. இவர்களுக்கென்று சில விசித்திரமான குணங்கள் உண்டு. எதிராளி எது செய்தாலும் இவர்களுக்கு சந்தேகம் வரும். கர்சீப்பை எடுக்க பாக்கெட்டில் கைவிட்டால் கூட ஏதோ இவர்களைத் துப்பாக்கி எடுத்து சுடப்போவது போல நினைத்து முதலில் அவர்களை அடித்து விடுவார்கள். இவையெல்லாம் ஒரு வித தாழ்வு மனப்பான்மையினால் சில சமயங்களில் ஏற்படுவது.

இந்த மாதிரி சமயங்களில் அவர்களை அறையில் போட்டு பூட்டிவிடுவோம். கத்தி ஓய்ந்து தூங்கிவிட்டு எழுந்து வரும்போது எல்லாவற்றையும் மறந்த சாதாரண மனிதனாக வருவான். அதுதான் இவனிடமுள்ள தனிக் குணம்.

எனவே இது போன்ற குழந்தைகள் பிறந்து வளரும்போது நடந்துவிட்டதற்காக வருந்துவதோ, அல்லது மற்ற குழந்தைகளுடன் விட்டு அவர்களை மேலும் மனம் குன்றியவர்களாக ஆக்குவதோ நல்லதில்லை. ஓரளவு அவர்களைச் சாதாரண வாழ்க்கை முறைக்காவது பழக்கப்படுத்துவதுதான் புத்திசாலித்தனம்.''

என்று முடித்தார் இரு போவாஸ்.

இது எங்கோ, யாருக்கோ நடந்துகொண்டிருக்கிற பிரச்னையல்ல. நாளுக்கு நாள் இதுபோன்ற குழந்தைகள் அதிகமாகி வருகிறார்கள். இப்படிப்பட்ட குழந்தைகளை பெற்றுக் காலம் முழுவதும் ரத்தக் கண்ணீர் வடிப்பதை விட, புத்திசாலித்தனமாக வருமுன் காப்பதே சிறந்தது. அதிலும் பெண்களின் கையில்தான் இந்தப் பிரச்னை எதிர்காலத்தை நோக்கிக் கொண்டிருக்கிறது.

புகைப்படங்கள்: பால்ராஜ்

# வெண்ணெயிலிருந்து தண்ணீர்!





வாங்குவோருக்கு—3

வெண்ணெய் அல்லது நெய் வாங்காத வீடே இல்லை என்று கூறிவிடலாம். குழந்தைகளுக்காக ஓடியாடி வேலை செய்பவர்களுக்காக, நல்ல சாப்பாட்டு ரசிகர்களுக்காக.... ஆக மொத்தம் ஒவ்வொரு குடும்பத்திற்கும் வெண்ணெய் அல்லது நெய் அவசியம் தான்.

வாங்குவோரின் அத்தியாவசியத் தேவையைப் புரிந்து கொள்ளும் சில வியாபாரிகள் தான் அதில் எத்தனை தகிடுதத்தங்கள் செய்கிறார்கள்!

இன்றைக்கு வெண்ணெய் இருபத்திநாலு ரூபாயிலிருந்து இருபத்தியெட்டு ரூபாய்வரை விற்கிறது. இது நல்ல தரமான வெண்ணெயின் விலை.

ஆனால் மதிய நேரத்தில் உங்கள் வீட்டிற்கு சைக்கிளில் ஒரு பையை வைத்து எடுத்துக் கொண்டு வருவார். 'அம்மா, இது அருமையான ஊத்துக்குளி வெண்ணெய். வாசனை வேண்டுமானால் பாருங்கள்...' என்று பாட்டிலைத் திறந்து காண்பிப்பார். வெண்ணெயைக் காய்ச்சிக் கொண்டு இருக்க வேண்டிய சிரமத்தைக்கூட உங்களுக்குக் கொடுக்காமல் நெய்யாகக் கூடக் கொண்டு வருவார். அந்த மணம் வீட்டைச் சுற்றி வரும்.

விலை கேட்டால் படு மலிவு! கிலோ பதினைந்து ரூபாய்க்குள்தான் இருக்கும். நெய்யாக இருந்தால் பேரம் பேசினால் இருபது ரூபாய்க்குக் கூடக் கொடுத்து விடுவார். உங்களுக்கும் ஒரே சந்தோஷம். ''எவ்வளவு புத்திசாலித்தனமாக, படு சீப்பாக வாங்கி விட்டோம். நம்மை மண்டு மண்டுங்குறாரே. சாயந்திரம் 'அவர்' வரட்டும், சொல்லணும்''

வியாபாரிக்குக் காசு கொடுத்து அனுப்பி விடுவீர்கள். வீட்டிற்குள் கொண்டு வந்து வெண்ணெயைக் காய்ச்ச வாணலியில் ஊற்றினால்....

சில வியாபாரிகள் மாயாஜால வித்தையாக எடுக்க எடுக்க தண்ணீர் வரும்படி செய்திருப்பார்கள்!

சிலர் அருமையான டால்டாவை மெழுகி வைத்திருப்பார்கள்.

சிலர் வயிற்றைக் குமட்டும் வாசனை வரக் கூடிய மிருகக் கொழுப்பைச் சேர்த்திருப்பார்கள்.

'அத்திப்பழத்தைப்பிட்டுப்பார்த்தால் அத்தனையும் சொத்தை' என்ற கதைதான். வெளியில் பார்க்கத்தான் பிரமாதம்!

இப்படி வீதியில் வாங்கி ஏமாந்தவர்கள் ஏராளமாக இருக்கிறார்கள். ஒரு முறை சூடு பட்டால் மீண்டும் அவர்கள் இது போல ஏமாறுவதில்லை. ஆனால் பரந்த இந்த நாட்டில் ஏமாற இன்னொரு ஆளா கிடைக்க மாட்டார் அந்த வியாபாரிக்கு?



அட்டையில்..
"நான் ஏமாற ஆளே!" என்ற சந்தோஷமா இருக்கு?

வண்ணப் படம்: 'யோகா'

இவர்கள் விற்கும் நெய்யிலும் நாலு கரண்டி எடுத்துவிட்டு ஐந்தாவதை எடுக்கும்போது டால்டா உங்களை பார்த்துச் சிரிக்கும்.

பொதுவாகவே, ஒவ்வொரு சாமானுக்கும் ஏறக் குறைய என்ன விலை என்பதைத்தெரிந்து வைத்துக் கொண்டால் இது போல ஏமாற வேண்டியிருக்காது. 'அவர்கள் ஏமாந்து மலிவான விலைக்குக் கொடுத்து விட்டார்கள்' என்று அல்ப சந்தோஷமும் படவேண்டாம். நியாயமான விலையில் தரமான பொருட்களை வாங்குவது. யாரும். யாரையும் ஏமாற்ற வேண்டியதில்லை என்ற கொள்கையை வைத்துக்கொண்டு விட்டால் இது போலக் கஷ்டப்பட வேண்டிய அவசியமே இல்லை.

சாதாரணமாக வெண்ணெய் இரண்டு வகைகளில் தயாரிக்கப்படுவது அனைவருக்கும் தெரியும். (1) பாலிலிருந்து எடுக்கப்படுகிறது (2) தயிரிலிருந்து எடுக்கப்படுவது. ஆவின் மில்க் போன்ற பெரிய நிறுவனங்கள் பாலிலிருந்து எடுக்கப்படும் வெண்ணெயையே விற்பனை செய்கின்றனர். தயிரிலிருந்து சில தரமான நிறுவனங்கள் வெண்ணெயை எடுத்து விற்பனை செய்கின்றன.

நல்ல பால் கிடைக்கும் வசதியுள்ளவர்கள் சுகாதாரமான முறையில் வீடுகளிலேயே தயாரித்துக் கொள்ளலாம். கெட்டித் தயிராகத் தோய்த்து அதிலிருந்து எடுக்கப்படும் வெண்ணெயே உடம்பிற்கு மிகவும் சிறந்தது என்று இந்தத் துறை வல்லுனர்கள் கூறுகின்றனர். ஃப்ரிட்ஜ் வசதியுள்ளவர்கள் நல்ல பாலின் கெட்டியான ஏடுகளை சேர்த்து வைக்கலாம். கணிசமான அளவு சேர்ந்ததுடன் நன்கு கடைந்து அருமையான வெண்ணெயைத் தயாரிக்கலாம். ஆனால் நகர்ப்புறங்களில் வசிப்பவர்களுக்கு நல்ல பால் கிடைப்பது என்பது குதிரைக் கொம்பு போன்றதுதானே!

சாதாரணமாக வெண்ணெய் அல்லது நெய் தரமானதாக எங்கு கிடைக்கும் என்பதைக் கேட்டுத் தெரிந்து கொண்டு அதே கடையில் வாங்கும் பழக்கத்தை மேற்கொள்ளலாம். ஏனெனில் நிரந்தரமான வாடிக்கையாளர் என்பதால் கடைக்காரரும் கொஞ்சம் சிரத்தை எடுத்துக் கொள்ளுவார்.

இல்லை யென்றால் வெண்ணெயைப் பொறுத்தவரை உங்களைச் சுலபமாக ஏமாற்றி விட முடியும். கெட்டி வெண்ணெயாக இல்லாமல் நீர் கலந்து தொள தொள வென்று இருக்கும்போது நீரின் எடையும் சேர்த்துக் கணக்கிடப்படுகிறது.

மாவுப் பொருட்களை, மிருகக் கொழுப்புக்களை கலந்து விடுகிறார்கள்.

இதனால், வாசனைக்கு, சுவைக்கு என்று சேர்க்கப்படும் நெய்யால் சாப்பிடும் சாப்பாட்டின் சுவையே கெட்டுப் போய் விடுகிறது. எனவே கொஞ்சம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டியதுதான். —டி. ஆர். ரமேஷ்

---

## இம்மாத இல்லத்தரசி போட்டி

**பொருள்: ரசப்பொடிகள்**

**முடிவு தேதி: 15.7.83**

**சமையல் கூப்பன்**

................ என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இத்துடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும், எந்தப் புத்தகத்திலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

# இதோ ஒரு முக்கிய அறிவிப்பு!

## யூனிட் ட்ரஸ்டின் சிறப்பு ஜூலை விற்பனை.
## வருடத்தின் மிகக்குறைந்த விலையில்—
## யூனிட் ரூ. 12.25 மட்டுமே.

யூனிட்டுக்களில் செய்யும்
முதலீடு உங்களுக்கு அதிக
வருமானத்தைத் தருகிறது.
இது மட்டுமா!
யூனிட்டுக்களின் பிரத்யேக
பயன்களான பாதுகாப்பு,
எளிதில் பணமாக்கும்
வசதி மற்றும்
வரிச்சலுகைகளும்
கிடைக்கின்றன
இந்த வாய்ப்பினை நழுவ
விடாதீர்கள்.



**விரைவில் எதிர்பாருங்கள்
எங்கள் டிவிடெண்ட்
விளம்பரத்தை! உங்களுக்கு
ஒரு நற்செய்தி காத்திருக்கிறது.**

விவரங்களுக்கு
அரசுடைமையாக்கப்பட்ட
வங்கிகள், தலைமை தபால்
நிலையங்கள் மற்றும் எங்களது
தலைமை பிரதிநிதிகள் அல்லது
ஏஜெண்டுகளை அணுகுங்கள்.



**யூனிட் ட்ரஸ்ட்
ஆப் இந்தியா**

தலைமை அலுவலகம் : பம்பாய்.
(ஒரு பொதுத்துறை நிதி நிறுவனம்)

பிராந்திய செயலகம் :
ரெஜினா மான்ஷன்,
46 செகண்ட் லேன் பீச்
சென்னை-600 001. போன் : 27433

UTI 124 83 TMA

## உங்கள் சேமிப்பின் தொடக்கம் யூனிட்டுகளாக இருக்கட்டும்.

எங்கள் முக்கிய பிரதிநிதிகள் :

திரு. ஏ. தனபால், 10-ஜே ஹாஸ்பிடல் ரோடு, கோவை-641 018, போன் 34776
திரு. எம். ராமமூர்த்தி, 30 எல்.ஐ.சி. காலனி, மதுரை-625 002, போன் : 30160
திரு. கே. முத்துசாமி, 52-ஏ வ.உ.சி. நகர், தஞ்சாவூர்-613 007, போன் : வீடு 1224
திரு. என். கே. இங்கர்சால், 155, சுவர்ணாம்பிகை தெரு, அன்னதானப்பட்டி, சேலம்-636 002 போன் : 64302 P.P.
திரு. எம். எம். காஜா, பக்காளி பில்டிங் அனெக்ஸ் 41-பி, திருவனந்தபுரம் நெடுஞ்சாலை,
பாளையங்கோட்டை-627 002 போன் : 4520, வீடு 5395

மர்மத் தீவில்

# மாலா-பாலா

கதை: மகிழ்ச்சிக் கண்ணன்
சித்திரம்: விஜயா















ஆட்கள் போகின்றனர். பாலா ஒரு மரத்திலிருந்து ஒரு மரம் தாவி வீராசாமி, குப்பனின் மகன் முதலிய மற்றவர்கள் இருக்கும் இடம் அடைகிறான் மரத்திலிருந்து பாலா இறங்கியபடி...












வாங்க பாஸ், குட் ஈவினிங்

குட் ஈவினிங் அங்கிள். நீங்க டிரஸ்ஸுங்க வாங்கித் தந்ததுக்கு ரொம்ப தேங்க்ஸ் அங்கிள்! ராதாவும் கமலா மாமியும் ரொம்ப உதவியா இருக்காங்க..

நல்லது. இப்போ எப்படி அழகா ரதி மாதிரி இருக்கே. லட்ச ரூபா கூட கொடுப்பா உன்னைப் பார்த்தா!

தொடரும்....

# விளையாட்டுத் துறையில் வீராங்கனைகள்

**குமாரி யாஸ்மின் (தடை ஓட்டம்)**

1974 ஆம் ஆண்டு முதல் தடை ஓட்டத்தில் தேசிய அளவில் சிறந்த சாம்பியன் ஆகத் திகழ்ந்து வருகிறார் குமாரி யாஸ்மின். ஒவ்வொரு ஆண்டும் புதிய சாதனை ஏற்படுத்த முயன்று வருகிறார். ''என்னுடைய இந்த வெற்றிகளுக்கெல்லாம் காரணம் எனது பயிற்சியாளர் திரு டிஸோஸாதான்'' என்கிறார் இவர்.

''ஆசிய விளையாட்டுப் போட்டி-களில் கலந்து கொண்டேன். ஆனால் ஏதும் பரிசு பெறவில்லையே'' என்ற வருத்தம் இவரது குரலிலேயேதெரிந்து கொள்ள முடிகிறது. விரைவிலேயே அந்த வாய்ப்பைப் பெற வாழ்த்துக்கள்.

**குமாரி எஸ். சுகுமாரி (சைக்கிளிங்)**

1979ஆம் ஆண்டிலிருந்து போட்டியில் பங்கு பெற்று வருகிறார். தமிழகத்தைப் பொறுத்தவரை இவர்தான் ''சாம்பியன்''. 1982ஆம் ஆண்டு தாய்லாந்தில் நடைபெற்ற போட்டியிலும் லண்டனில் நடைபெற்ற போட்டியிலும் கலந்து கொண்டார் என்பது குறிப்பிடத் தக்கது ஆகும். ''ஆசிய விளையாட்டில் ஆண்களுக்கு மட்டுமே சைக்கிளிங் போட்டி நடைபெற்றது. பெண்களுக்குப் போட்டியே நடத்தவில்லை. பெண்கள் சைக்கிளிங் நடத்தியிருந்தால் நிச்சயம் இந்தியா வெற்றி பெற்றிருக்கும்'' என்று கூறுகிறார் இவர் ''இந்தியா முழுவதும் சைக்கிளில் சுற்றி வரப் போகிறேன். இதுதான் என்னுடைய கனவு, லட்சியம் எல்லாம்'' என்று கூறுகிறார்.

**ஜபீதா பேகம் (நீச்சல்)**

1977-ல் தென்னிந்திய மண்டலத்திற்காகப் போட்டியில் கலந்துகொண்டார். தேசிய அளவில் ''ஃப்ரீ ஸ்டைல்' முதல் ரேங்கில் வெற்றி பெற்று சாம்பியன் ஆகத் திகழ்ந்து வருகிறார். 'ஆசிய விளையாட்டுப் போட்டியில் தன்னை அழைக்கவில்லை' என்று வருத்தப்பட்டுக் கொள்கிறார். தான் போட்டியில் கலந்து கொண்டிருந்தால் நிச்சயம் வெற்றியைத் தேடித் தந்திருப்பேன் என்றும் கூறும் இவர் சென்ற ஆண்டு இலங்கையில் நடந்த போட்டியில் ஐந்து தங்கப் பதக்கம் உட்பட மொத்தம் எட்டுப் பதக்கங்கள் பெற்றிருக்கிறார். ரோஸலின் மெட்ரிகுலேஷன் பள்ளியில் பத்தாம் வகுப்பு படிக்கும் மாணவி இவர்.

**திருமதி ருக்மணி சுகுமாரன் (பால் பாட்மிண்டன்)**

1971 ஆம் ஆண்டு முதல் போட்டியில் கலந்து கொண்டு வருகிறார். தான் பிறந்தது ஆந்திராவில் என்றாலும் கர்நாடகத்தில் படித்து வந்தாராம். அப்போது கர்நாடக மாநிலப் பல்கலைக் கழகத்திற்கான போட்டியில் கலந்து கொண்டு வெற்றி பெற்றாராம். தற்போது தமிழகத்துக்காக காப்டனாக போட்டியில் கலந்து கொள்கிறார். தென் மாநிலங்களுக்கு என்று உள்ள போட்டியில் கடந்த 25 ஆண்டுகளாக கர்நாடக மாநிலமே வெற்றி பெற்று வருகிறது. இவ்வாண்டு நடைபெற்ற போட்டியில் முதன் முதலாக கேரள மாநிலம் வென்றிருக்கிறது. 'அடுத்த ஆண்டு நிச்சயம் தமிழகம் வெற்றி பெற என்னால் இயன்ற அளவு முயற்சிப்பேன்' என்று நம்பிக்கையுடன் கூறினார்.

தொகுப்பு:கே. தியாகராசன்


குமாரி யாஸ்மின்


குமாரி எஸ். சுகுமாரி


ஜபீதா பேகம்


திருமதி ருக்மணி சுகுமாரன்

# இதற்கு என்ன செய்வது?

## தாய்தான் முதல் பாதுகாப்பு!

**ஜானகி** — மயிலாடுதுறை

எனக்குத் திருமணமாகி ஐந்து வருடம் ஆகிறது. ஒரு ஆண்குழந்தை நான்கு வயதில் இருக்கிறது. புகுந்த வீட்டில் நடந்துகொண்ட முறைகளினால் மனம் கசந்து வெளியேறி விட்டேன். இப்போது 'குழந்தை என்னுடைய பரம்பரை வாரிசு. அதனால் என்னுடன்தான் எங்கள் குடும்பத்தில் இருக்க வேண்டும் என்கிறார் அவர். நான் குழந்தையை விட்டு விட்டு எப்படி வாழ்வது?

**பதில்**

குழந்தைக்குத் தாய்தான் முதல் பாது காப்பு. ஆனால் இது போன்ற தகராறுகள் வரும்போது நீதிமன்றங்களில் குழந்தை களையே 'நீ யாரிடம் வளர விரும்புகிறாய்?' என்று கேட்பார்கள். குழந்தைக்கு யார் மீது பாசம் அதிகம் என்பதை இதன் மூலம் கண்டு பிடித்து அவர்களிடம் ஒப்படைப் பார்கள். நீதிமன்றத்தின் நடைமுறை இது. அதைவிட உங்களுடைய உறவினர்கள் நாலு பேரை வைத்துக் கொண்டு இதைத் தீர் மானிப்பது உங்களுக்கு நல்லது.



## விபத்தில் கால் போனது!

**அன்பரசி** — சென்னை

நாங்கள் மிகவும் ஏழ்மை நிலையில் இருப்ப வர்கள். என்னுடைய கணவர் நான்கு மாதங்களுக்கு முன்பு சைக்கிள் ரிக்ஷா ஓட்டும்போது ஒரு கார் மோதி கால் பழு தாகிக்கிடக்கிறார். கார்காரரும் நூறு ரூபாய் தந்தார். அது அவருடைய ஆஸ்பத்திரிச் செலவுக்கே சரியாகி விட்டது. தெரிந்தவர்க ளெல்லாம் கோர்ட்டில் போட்டால் பணம் கிடைக்கும் என்கிறார்கள். அதற்கு நிறையச் செலவாகுமா? அவருடைய வருமானத்தையே நம்பி வாழ்ந்த எங்களுக்கு ஏதாவது விமோசனம் கிடைக்குமா?

**பதில்**

உங்களைப் போன்ற ஏழைகளுக்கு என இலவச சட்ட உதவிக் குழுவே நீதி மன்றக் கட்டிடத்திற்குள் இயங்கிவருகிறது. அவர்கள் உங்களுக்காக இலவசமாக வாதாடுவார்கள். கோர்ட் கட்டணமும் அதிகமாகாது. எனவே நீங்கள் கோர்ட்டிற்கென நிறையச் செல வாகுமா என அச்சப்பட வேண்டிய அவசிய மில்லை.



## உயிலுக்கும், செட்டில் மெண்ட்டுக்கும் என்ன வித்தியாசம்?

**கல்யாணி மனோகர்** — செங்கல்பட்டு

என்னுடைய மாமனாருக்குச் சொந்தமாக சிறிது நிலமும், ஒரு வீடும் இருக்கிறது. மூத்த மகனை என்னுடைய கணவருடன்தான் இருக்கிறார். மற்ற மூன்று மகன்களும் வெவ் வேறு ஊரில் இருக்கிறார்கள். அவர் சொத் தைப் பற்றி உயில் எழுதுகிறேன் என்று சில சமயமும் இப்பொழுதே செட்டில்மெண்ட் செய்துவிடுகிறேன் என்று சில சமயமும் கூறு கிறார். இந்த இரண்டுக்கும் என்ன வித்தி யாசம்?

**பதில்**

உயில் எழுதுவது சில வகையில் நல்லது. செட்டில்மெண்ட் செய்வது சில விதங்களில் நல்லது.

உயில் எழுதுவது என்பது பொதுவாக ஒருவர் தன்னுடைய கடைசி விருப்பமாக வைத்திருப்பார். எனவே உயிலை தன் விருப் பப்படி மாற்றி எழுதிக் கொள்ளலாம். இதை ரிஜிஸ்டர் செய்ய வேண்டும் என்றோ ஸ்டாம்ப் பேப்பரில் எழுத வேண்டும் என்றோ அவசிய மில்லை. ஆனால்செட்டில்மெண்ட் என்பது அப் படியல்ல. ஒருவர் ஒரு முறை எழுதி செட்டில் செய்துவிட்டால், அதை எழுதிய நாளிலிருந்து நடைமுறைக்கு வந்து விடுகிறது. யாருக்கு செட்டில் செய்து கொடுத்திருக்கிறாரோ,

டி.ஆர்.ரமேஷ்

அவர் முழு பாத்தியதை பெற்று விடுகிறார். ஆனால் உயில் என்பது எழுதியவர் இறந்த பிறகே நடைமுறைக்கு வருகிறது. செட்டில் மெண்டை ரிஜிஸ்டர் செய்ய வேண்டும்.

இரண்டின் சாதக பாதகங்களையும் கூறி யிருக்கிறேன். எது நல்லது என்று தீர் மானிக்க வேண்டியது உங்களுடைய பொறுப்பே.



## புகுந்த வீட்டில் கொடுமை

**ரேவதி** — மன்னார்குடி

எனக்குத் திருமணம் ஆகி ஒரு வருடம் ஆகிறது. படித்துப் பட்டம் பெற்ற நான் புகுந்த வீட்டில் படும் துயரங்கள் இவ்வளவு அவ்வளவு என்றில்லை. ஒரொரு சமயம் தற் கொலை செய்துகொண்டு விடலாமா என்று கூடத் தோன்றுகிறது. இந்த நிலையில் எனக்கு வழி காட்டுங்களேன்.

**பதில்**

புகுந்த வீட்டின் கொடுமைகளுக்குப் பயந்து தற்கொலை செய்துகொள்ளும் பெண் களின் பட்டியல் நீண்டுகொண்டே போகிறது தயவு செய்து உங்கள் பெயரையும் சேர்க்கா தீர்கள். பெண்கள் தன்னம்பிக்கை, தைரியம் மிகுந்தவர்களாக இருக்க வேண் டும். வாழ்க்கை என்பது வாழ்வதற்காக உள்ள ஒன்று. சாவதற்காக அல்ல. கொடு மையை எதிர்த்து வாழ முடியும். அவர்களும் உங்களைப் போன்ற மனிதர்கள்தானே? மீறி அவர்கள் என்ன செய்துவிட முடியும்? அப்படி யில்லையென்றால் பட்டதாரியான உங்களால் தனித்து நின்று வாழ முடியாதா என்ன? அன்புக்கு ஏங்கும் எத்தனையோ அனாதை யான குழந்தைகள் உள்ளன. அவர்களை உங்கள் வாழ்க்கையில் ஏற்றுக் கொள்ள முடி யாதா?

## பிரசவ சமயம் வலிப்பு வருமா?

**பர்வத வர்த்தனி** — மதுரை

எனக்கு இப்பொழுது ஏழு மாதமாகிறது. இது முதல் குழந்தை. சிறு வயதில் எனக்கு வலிப்பு வருவதுண்டு. ஏழு வயதிற்குப் பிறகு வருவதில்லை என்றாலும், பிரசவ வலி எடுக் கும்பொழுது அது வந்து விடுமோ என்று



என்னுடைய அன்னை மிகவும் பயப்படு கிறாள். இதைத் தடுக்க முடியாதா?

**பதில்**

உங்களுக்கு என்று இல்லை, பொதுவாக வலியே வராதவர்களுக்குக் கூட வலிப்பு போன்றவை வரக் கூடும் என்பதை எதிர் பார்த்தும், வேறு பல காரணங்களுக்காகவும் போடப்படுவதுதான் 'டெட்டனஸ்' ஊசி. ஏழு, எட்டு, ஒன்பது மாதங்களில் ஒவ்வொரு கர்ப்பிணிப் பெண்ணும் இதைக் கட்டாயம் போட்டுக் கொள்ள வேண்டும். இப்படிச் செய்தால் உங்களுக்கு வலிப்பு வருமோ என்று பயப்பட வேண்டிய அவசியமில்லை.



## வெண்மைத் திட்டுக்கள்

**மங்களம் சிவராமன்** — சின்ன சேலம்

என்னுடைய குழந்தைக்கு இரண்டரை வயதாகிறது. அவனுடைய உடம்பில் அங் கங்கே வெண்மையான திட்டுக்கள் காணப் படுகின்றன. எல்லோரும் சொன்னார்கள் என்று மஞ்சளைப் பூசி ஊறவைத்துக் குளிப் பாட்டியும் பார்த்துவிட்டேன். போகவில்லை. இப்படியே இருந்து, பெரியவனாகும்போது மேலும் அதிகமாகி விடுமோ என்று பயமாக உள்ளது. என்ன செய்ய?

**பதில்**

இதற்கு ஹோமியோபதி வைத்தியத்தில் பூரணமாக, குழந்தைப் பருவத் தில் குணப்படுத்திவிட முடியும் என்று கூறு கிறார்கள். எனவே நல்ல ஹோமியோ பதி மருத்துவரை அணுகி முயற்சி செய்து பாருங்கள்.

தென்னார்க்காடு மாவட்டம் (உடையார்) இந்து நத்தமன் உடையார் (பார்க்கவ குலம்) வகுப்பைச் சேர்ந்த பத்தாம் வகுப்பு பயின்ற குடும்பப் பாங்கான 18 வயது மணமகளுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த நல்ல வேலை (அ) தொழில் செய்யும் மணமகன் தேவை. முழு விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் 856.

தெலுங்கு ஐயர் முலகனாடு 28 வயது மிகவும் லட்சணமான பட்டதாரி ஆசிரியை (தனியார் பள்ளி) சென்னையில் வேலை பார்க்கும் பெண்ணுக்கு (கௌசிக கோத்திரம்) நிரந்தர உத்தியோகத்தில் உள்ள பரந்த மனப்பான்மை கொண்ட மாப்பிள்ளைதேவை ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். வேறு உட் பிரிவுகளும் சம்மதம். பெட்டி எண் 857

தமிழ் ஐயர் பிரஹசரணம் காச்யப கோத்திரம் வயது முப்பத்தைந்து எஸ்.எஸ்.எல்.சி. டைப்ரைட்டிங் ஹையர் வேலையில்லாத, குடும்பப் பொறுப்புகள் அறிந்த அழகான பெண்ணிற்கு நிரந்தர வருமானமும் நற்குணமும் உள்ள வரன், எந்த உட்பிரிவானாலும் தேவை. ஜாதகம், பிறந்த நேரம், தேதி விவரங்கள் அனுப்பவும். பெட்டி எண் 858.

கௌசிக கோத்திரம், வடமாள், அனுஷம் வயது 35 தனியார் கம்பெனியில் ரூ. 450 சம்பளத்தில் பணி புரியும் ஒரு கை, கால் ஊனமுள்ள பிராமணப் பையனுக்கு நல்ல வேலையில் நடுத்தர வர்க்கத்திலுள்ள மணமகள் தேவை. வரதட்சிணை தேவையில்லை. எளிய திருமணம். உட்பிரிவுகள் பரவாயில்லை. பெட்டி எண் 859.

வடகலை ஐயங்கார், ஸ்ரீவத்ஸ கோத்திரம், திருவோண நட்சத்திரம். பி. காம் ஷார்ட் ஹேண்ட், டைப்ரைட்டிங் இரண்டிலும் ஹையர் கிரேட் பாஸ் செய்துள்ள 22 வயது பெண்ணுக்கு நல்ல உத்தியோகத்தில் உள்ள 28–29 வயதுக்கு உட்பட்ட மணமகன் தேவை. ஜாதகத்துடன் விவரம் அனுப்பவும் பெட்டி எண் 860.

பிரமீளா என்கிற 25 வயதுடைய தமிழ் நாடு அரசில் வேலை பார்க்கின்ற 5.5 அடி உயரமுள்ள மாநிறமுள்ள, கம்மவார் நாயுடு பெண்ணிற்கு மணமகன் தேவை. பெட்டி எண் 861.

தஞ்சைக்கு அருகில் பள்ளி நிர்வாகியாகவும், தலைமை ஆசிரியராகவும் பணி புரிகின்ற நல்ல வசதியுள்ள இந்து கள்ளர் வயது 35, உயரம் 5' 10'' நல்ல சிகப்பு, சிறந்த தோற்றம் கொண்ட இவருக்கு மேற்படி இனத்தில் நல்ல அழகும், தெய்வ சிந்தனையும் உள்ள ஆசிரியை பயிற்சி பெற்ற அல்லது பி.எட், பி.லிட் மணமகள் தேவை. ஏழைகளுக்கு முன்னுரிமை அளிக்கப்படும். இந்து முதலியார், வெள்ளாளர் பிராமண பிரிவினரும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண் 862.

மதுரையில் தனியார் துறையில் நல்ல வேலையில் உள்ள 28 வயது (மாதம் ரூ. 1500) பிராமண-சௌராஷ்டிர கலப்புத் திருமணத்தில் பிறந்த பையனுக்கு பி. ஏ. பி.எஸ்.சி. படித்த அழகான இதே போன்ற அல்லது ஒத்த கௌரவமான குடும்பத்திலிருந்து மணமகள் தேவை. ஜாதகம், போட்டோவுடன் விவரங்கள் எழுதவும். பெட்டி எண் 863.

தமிழ் செட்டியார் அரசு வேலையில் உள்ள மாதம் ரூ. 900 ரூபாய் வருமானம் உள்ள

# திருமண மலர்

மனைவியை இழந்த 33 வயது இரண்டு வயதில் ஆண் குழந்தை உடையவருக்கு சைவ குடும்பத்தைச் சார்ந்த ஓரளவு வசதியான பெண் தேவை. கலப்புக் குடும்பம் இளம் விதவை இருந்தாலும் தொடர்பு கொள்ளலாம். பெட்டி எண் 864.

**Wanted a widow for broad minded Assistant Proffessor of a Madras City College Drawing Rs. 1600 p.m. Aged 27 Roman Catholics preferred. Religion No. bar Box No. 865**

தெலுங்கு அய்யர், முலகனாடு டெலிபோன் சூபர்வைசராக உள்ள மிகவும் லட்சணமான வரனுக்கு (வயது 32 காஸ்யப கோத்திரம்) நிரந்தர உத்தியோகம் பார்க்கும் லட்சணமான, குடும்பப்பாங்கான (எந்த உட்பிரிவும் சம்மதம்) பெண் தேவை. ஜாதகம், போட்டோவுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் 866

24 மனை தெலுங்குச் செட்டியார், மக நட்சத்திரம், 24 வயது 5'.4'' அழகாகவும் பம்பாயில் அரசாங்க உத்தியோகத்திலிருக்கும் குடும்பப் பாங்கான பெண்ணுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த மணமகன் தேவை. ஜாதகம், குடும்ப விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் 867.

இந்து கலப்பு மணத் தம்பதிகளின் மகன் வயது 35. உயரம் 147 செ. மீ. படிப்பு மெட்ரிக். சொந்த வருமானம் ரூ. 2500க்கு மேல் உள்ள வரனுக்கு நல்ல குடும்பப் பாங்கான அழகுள்ள எஸ்.எஸ்.எல்.சி.வரை படித்த பெண் தேவை. கலப்பு மணக் குடும்பத்தார்கள் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் 868.

இளம்பிள்ளை வாதத்தால் பாதிக்கப்பட்ட 32 வயது பி. ஏ. படித்த முதலியார் பைய னுக்கு(மத்திய அரசில் வேலை மாதவருமானம் ரூ. 1000) பெண் தேவை. வேலையில் உள்ள சிறு ஊனமுற்றவர்களும் விண்ணப்பிக்கலாம்.

திருமண மலர்ப்பகுதியில் விளம்பரம் செய்ய கட்டணம் ரூ. 30/– தொகையை 'மங்கையர் மலர்' என்ற பெயருக்கு போஸ்டல் ஆர்டராக மட்டுமே அனுப்பவேண்டும். ஒரு விளம்பரத்தில் ஒருவருக்கு 30 வார்த்தைகளுக்குள் விவரங்கள் தர வேண்டும். பதில் அனுப்புபவர்கள் "விளம்பரதாரர், பெட்டி எண்.... c/o மங்கையர் மலர், கிண்டி, சென்னை-600032 என்ற விலாசத்துக்கு அனுப்பவும். தனிப்பட்ட கடிதப் போக்கு வரத்து கிடையாது.



எம்மதமும் சம்மதம். எளிய திருமணம் ஏற்றுக் கொள்ளப்படும். இப்பையனின் பி. எஸ். ஸி. படித்த சகோதரிக்கு (24 வயது) முதலியார் இனத்தில் வரன் தேவை. வங்கி அல்லது நல்ல வேலையில் உள்ள படித்த வரன்கள் வரவேற்கப்படுகின்றன. திருமணம் சிறப்பான முறையில் செய்து தரப்படும். பெண் கொடுத்துப் பெண் எடுப்பவர்களும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண் 869.

ஸ்ரீவத்ஸ கோத்திரம். வடமாள். தமிழ் ஐயர் சித்திரை நட்சத்திரம் வயது 29. தனியார் துறையில் மாதம் ரூ. 500 முதல் 600 வரை சம்பளம் பெறும் பையனுக்கு நல்ல குடும்பப் பாங்கான பெண் தேவை. ஜாதகம், மற்றும் குடும்ப விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் 870.

28 வயது சோழிய வெள்ளாளர் ரூ. 1200 சம்பளத்தில் உத்தியோகம். எம். எஸ். ஸி. படிப்பு. இந்த வரனுக்கு இரண்டாவது தாரமாக மணக்க விருப்பமுள்ள பரந்த மனப்பான்மை உள்ள, அழகான, குண முள்ள பெண் தேவை. விதவைகளும் விவாக ரத்தானவர்களும் விண்ணப்பிக்கலாம். ஜாதி மத பேதமில்லை. சீர் வரிசை தேவையில்லை. சமீபத்திய போட்டோ மற்றும் ஜாதக நக லுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் 871

எர்ணாகுளத்தில் மத்திய அரசு நிறுவனத் தில் மாதம் ரூ. 1800 சம்பாதிக்கும் 26 வய தான உத்திராட நட்சத்திரம் ஹரித கோத் திரம் பிருஹசரணம் வகுப்புப் பிராமணப் பையனுக்கு அதே வகுப்பில் பெண் தேவை. ஜாதகம் குடும்ப விவரங்களுடன் எழுதவும். பெட்டி எண் 872.

கருப்பப்பை இல்லாத காரணத்தினால் மனைவியும் மற்றும் இரு தரப்பிலும் மறுமணத் துக்குச் சம்மதித்துள்ள கௌசிக கோத்திரத் தைச் சேர்ந்த 40 வயதுள்ள ஐயர் வரனுக்கு 35 வயதுக்குள்ளாக பெண் தேவை. கல் யாணம் வம்ச விருத்திக்காகவும் வாரிசுக் காகவும் செய்து கொள்கிறபடியால் பெண் ணைப் பெற்றவர்கள் கவலைப்படத் தேவை யில்லை. வரன் ரெயில்வே செக்ஷன் ஆபீச ராகப் பணி புரிபவர். ஓர் ஏழைப் பெண் ணுக்கு வாழ்வு அளிக்கும் எண்ணம் இருப்ப தால், பெண் லட்சணமாயும், பரந்த மனப் பான்மை உள்ளவளாகவும் இருக்க வேண் டும். விருப்பமுள்ளவர்கள் போட்டோவுடன் எழுதவும். பெட்டி எண் 873.

உயரம் 165 செ மீ. நல்ல சிவப்பு நிறம். வயது 28. குரும்பக் கவுண்டர் இனத்தைச் சார்ந்த தமிழ் நாடு அரசு கல்விப் பணி யில் பணியாற்றும் எம். காம் பி.எட் படித்த மாதம் ரூ. 1200 வருமானமுள்ள மண மகனுக்கு அதே இனத்தைச் சேர்ந்த படிப் பும் அழகும் குணமும் உள்ள 20–24 வய திற்குள் மணமகள் தேவை. பெட்டி எண் 874

சைவ வேளாளர், பி. ஏ. படிப்பு வயது 30. ராணுவத்தில் உயர் அதிகாரி. நான்கு இலக்கத்தில் சம்பளம் பெறும் மணமகனுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த அழகும் பண்பும் உடைய 25 வயதுக்குட்பட்ட மணமகள் தேவை. சைவமாயிருத்தல் அவசியம். பெட்டி எண் 875.

பாரத்வாஜ கோத்திரம், அசுவதி நட்சத் திரம், அய்யர், வடமாள், 37 வயது சென்னை யில் மத்திய அரசு அலுவலகத்தில் ரூ. 1000 மாதச் சம்பளத்தில் உள்ள பையனுக்கு அய் யர் எஸ். எஸ். எல். ஸி. படித்து வேலைக்குப் போகாத, குடும்பப் பாங்கான, அடக்கமான மணமகள் தேவை. பையனுக்கு உடம்பில்

வெள்ளைப் புள்ளிகள் (லூகோடர்மா) உள்ளது. வரதட்சிணை கிடையாது. ஜாதகம், குடும்ப விவரத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் 876.

வடமாள், ஆத்ரேய கோத்திரம், தனியார் கம்பெனியில் டைப்பிஸ்டாக வேலை பார்க்கும் எஸ். எஸ். எல். சி. படித்த 36 வயதுப் பையனுக்கு சென்னையில் நிரந்தர வேலையில் உள்ள 28 வயதுக்குள் இருக்கும் அழகிய, குடும்பப் பாங்கான, தெய்வ பக்தியுள்ள பெண் தேவை. பையனுடைய மாத வருமானம் ரூ. 450. பிறகு ரூ. 700 வரும். ஜாதகம் இல்லை. வரதட்சிணை தேவையில்லை. கோயில், பதிவுத் திருமணம் போதுமானது. போட்டோவுடன் விண்ணப்பிக்கவும். பெ. எண் 877.

பிரஹசரணம், பாரத்வாஜ — ரேவதி— 5',6'' உயரம் — 24 வயது — தந்தை இல்லை. நல்ல குணம், உடற்கட்டு தோற்றமுள்ள மெரைன் என்ஜினியருக்கு (மாதம் ரூ. 3000) நல்ல அழகு, நிறம், குணம், படிப்புள்ள வேலையில் இல்லாத பொருத்தமான குடும்ப பொறுப்புள்ள பெண் (19-22) தேவை. உட்பிரிவுகள் சம்மதம். புகைப்படம் ஜாதகத்துடன் எழுதவும். பெட்டி எண் 878.

கௌசிக கோத்திரம்ஐயங்கார், ஆயில்யம், 36 வயது பட்டதாரிப் பெண்ணுக்கு நல்ல நிலையில் உள்ள பரந்த மனப்பான்மையுள்ள 38—45 வயதிற்குள் பிராமண மணமகன் தேவை. எளிமையான திருமணம். மனைவியை இழந்தோரும் ஊனமுற்றோரும் பார்வை இழந்தோரும் விண்ணப்பிக்கலாம் பெண் தற்காலிக வேலையில் உள்ளாள். பெட்டி எண் 879.

நல்ல குடும்பத்தைச் சேர்ந்த, அழகும், பண்பும் நிறைந்த, குடும்ப வேலைகளில் நன்கு தேர்ச்சி பெற்ற 32 வயதுள்ள செங்குந்த முதலியார் பெண்ணுக்கு மணமகன் தேவை. மனைவி இழந்தவர்களும் இதரவகுப்பைச் சேர்ந்தவர்களும் முழு விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் 880.

வடமாள், பாரத்வாஜம் இரண்டுபெண்கள் மட்டும் உடைய டெல்லி மத்திய அரசு டெபுடி செக்ரட்டரியின் 27 வயது பட்டதாரி, ஆங்கில ஆசிரியை கேட்டை நட்சத்திரப் பெண்ணுக்கு தகுந்த 34 வயதுக்குட்பட்ட பொறியியலாளர் அல்லது ஆபீஸராகப் பணிபுரியும் மணமகன் தேவை. உட் பிரிவுகள் சம்மதம். ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் 881.

சௌராஷ்டிரா (மதுரை) மார்க்கண்டேயர் கோத்திரம், புனர்பூசம், 159 செ.மீ. உயரம். வயது 30. பொதுத் துறை நிறுவனத்தில் ரூ. 1400 சம்பளம், டிப்ளோமா என்ஜினியருக்கு 25 வயதுக்குட்பட்ட வங்கி, அரசுத் துறையில் பணி புரியும் அதே வகுப்பைச் சேர்ந்த, அழகான, குடும்பப் பாங்கான பெண் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் 882.

திருநெல்வேலி, சைவப் பிள்ளைமார் வகுப்பைச் சேர்ந்த 25 வயதுள்ள, மதுரையில் பணியாற்றும் அழகான என்ஜினியருக்கு (பி. டெக்.) அதே வகுப்பைச் சேர்ந்த வசதியான, குடும்பத்தைச் சேர்ந்த மிக அழகான பட்டதாரிப் பெண் தேவை. புகைப்படம், ஜாதகம், குடும்ப விவரங்களுடன் தொடர்பு கொள்க. பெட்டி எண் 883.

ஆத்ரேய கோத்திரம், மகம், வடகலை. ஐயங்கார், 27 வயது, சிவப்பு நிறம், பி.யு.சி. டைப்ரைட்டிங் ஆகியவற்றில் தேர்ச்சி பெற்றவள், சீர் வரிசைகள் நன்கு செய்யக் கூடிய கௌரவமான குடும்பத்தில் குரோம் பேட்டையில் உள்ள இக் கன்னிகைக்கு நல்ல படிப்பும், நல்ல உத்தியோகத்தில் உள்ள, தமிழ் நாட்டில் பணி புரியும் மணமகன் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் 884.

செவ்வாய் தோஷமுள்ள வெள்ளாள முதலியார் இனத்தில் நடுத்தர வகுப்பைச் சார்ந்த வயது 27 பி. ஏ. மாநில அரசு உத்தியோகம் (தற்காலிகம்) ரூ. 650 பெண்ணிற்கு முதலியார் இனத்தைச் சேர்ந்த அரசு உத்தியோகத்தில் உள்ள பட்டதாரிகள் அதிக சீர், மற்றும் வரதட்சிணை எதிர்பாராதவர்கள் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் 885.

வடமாள், காச்யப கோத்திரம், நல்ல குடும்பத்தைச் சேர்ந்த 32 வயதான பேங்கில் வேலை பார்க்கும் பையனுக்கு உத்தியோகத்தில் உள்ள பட்டதாரிப் பெண்ணும், குடும்ப பாங்கான, பி. யு. சி. படித்த 30 வயது தங்கைக்கு (விபத்தினால் சிறிது ஊனமடைந்தவள்) அன்பும் பண்பும் அந்தஸ்தும் உள்ள மணமகன் தேவை. மனைவி இழந்தவரும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண் 886.

நல்ல குணம், தெய்வ பக்தி, ஒழுக்கம், கடமை உணர்வு, கீழ்ப்படிதல், இன்முகம் அமைந்துள்ள சீலம் போற்றும் இந்து குடும்பத்தைச் சேர்ந்த பட்டுநூல் செட்டி, 24 வயதுள்ள எம். ஏ., சென்னையில் அரசு ஊழியம் பார்க்கும் பெண்ணுக்கு தகுதியான வரன் தேவை. லட்ச ரூபாய் அளவில் ரொக்க ஆஸ்தி எதிர்காலத்தில் பெறுபவர். இந்து மதத்தினர் சாதி வேறுபாடு இல்லாமல் அணுகலாம். பெட்டி எண் 887.

# பருவ வயதினர் பலரைப் பாதிக்கும் பிரச்னை: பரு...
# அது பற்றிப் பேசுகிறாள் ஒரு புதுமணக் குமரி.

'பருவ வளர்ச்சி என்றாலே பரு வரும். அதற்கு பரிகாரம் கிளியரெஸில்: பருக்களை கரைத்து கட்டுப்படுத்த உதவுகிறது.'



"அப்போது எனக்கு வயது 13. எனக்கு பரு வரத் தொடாங்கியது. பரு வரும் போதெல்லாம் பல்லாண்டுகளாய் பாரா முகமாய் இருந்தேன். பின்பு ஒருநாள் என்னைப் பெண் பார்க்க ஒருவர் வந்தார். பருக்களை முகத்திலே பார்த்த உடனேயே என்னை அவர் வேண்டாம் என்றார். என் தோழி ஜெயாவின் ஆலோசனைப்படி நான் கிளியரெஸில் தடவத் துவங்கினேன். தவறாமல் அன்றாடம் இருமுறை தடவி வந்தேன். அப்புறம் ஒரு நாள் என் தோழி ஒருத்தியின் வீட்டில் மறுபடி 'அவரை' சந்தித்தேன். அவர் என்னை வைத்த கண் வாங்காமல் பார்த்தாரே பார்க்கணும். நீங்களும் நாள் தோறும் இருமுறை கிளியரெஸில் உபயோகியுங்கள். பருக்களைக் கட்டுப் படுத்துங்கள்! இப்போது ஜோடி சேர்ந்து வருகிறது கிளியரெஸில்!"

**கிளியரெஸில் வேனிஷிங் மெடிகேஷன் மற்றும் கிளியரெஸில் ஸ்கின் கலர்டு மெடிகேஷன்— ஒப்பற்ற 3-வழிச்செயல் கொண்டவை.**



1. உடைய வைக்கிறது பருக்களை



2. கரைக்கிறது பருக்களை



3. காய வைக்கிறது. பருக்களை




புதிய வேனிஷிங் மெடிகேஷன்

ஸ்கின் கலர்டு மெடிகேஷன்

OBM/8625R TAM

**கிளியரெஸில்** உலக நம்பர் 1 முகப் பரு மருந்து க்ரீம்

தனியார் நிறுவனத்தில் ரூ. 4000 சம்பாதிக்கும் 35 வயதான பூராட நட்சத்திரம் காஸ்யப கோத்திரம், அஷ்ட சஹஸ்ரவரனுக்கு குடும்பப் பாங்கான பட்டதாரி நடுத்தரக் குடும்பத்தில் மணமகள் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். சிறு வயதில் இளம்பிள்ளை வாதத்தால் பாதிக்கப்பட்டதால் நடையில் சிறிது தெரியும். அதனால் ஒருவிதமான சிரமமும் இடையாது. போட்டோ, ஜாதகம் மற்ற விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் 888.

கௌசிக கோத்திரம், பிரஹசரணம், புனர்பூச நட்சத்திரம், தனியார் கம்பெனியில் ரூ. 900 சம்பளம் பெறும் நல்ல குணமுடைய குடும்பப் பாங்கான 32 வயது பி. காம் படித்த பெண்ணுக்கு நல்ல படிப்பும் வேலையும் உள்ள மணமகன் தேவை. நல்ல முறையில் திருமணம் நடத்தப்படும். உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண் 889.

மாத்வ தேஸஸ்த பிராமண இனத்தைச் சேர்ந்த பி.ஏ. பி.டி. படித்து ஆசிரியையாகப் பணி புரியும் 42 வயதான பெண்ணிற்கு எஸ். எஸ். எல். சி.யாவது படித்த பிராமண மணமகன் தேவை. பெண்ணிற்கு ரேவதி நட்சத்திரம். ஜமதக்னி கோத்திரம். எளியவர்களும் வேலை இல்லாவிட்டாலும் விண்ணப்பிக்கலாம். பெண்ணிற்கு ஜாதகம் இடையாது. பெட்டி எண் 890.

வன்னிய குல க்ஷத்திரிய எஸ்.எஸ்.எல்.சி. படித்த குடும்பப் பாங்கான பெண்ணுக்கு வேலை செய்யும் பட்டதாரி மணமகன் தேவை. ஜாதகம், பிறந்த தேதி, நேரத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் 891.

35–36, 5'.8'' வடமான், பாரத்வாஜ, அவிட்டம் 3, குஜ தோஷம், பட்டப் படிப்பு பூர்த்தியாகாத, சென்னையில் நல்ல கம்பெனியில் வேலை. வெட்டுப் போக சம்பளம் ரூ. 1250. பெற்றோருடன் சொந்த வீட்டில் இருக்கும் பையனுக்குச் சென்னையில் வேலை பார்க்கும் மணமகள் தேவை. மற்ற பிரிவுகளும் சம்மதம். ஜாதகமும், விவரங்களும் பெட்டி எண் 892.

நல்ல சிவப்பு, நிறை அழகு, ஆரோக்கியம், சுறுசுறுப்பு, தெய்வ பக்தி, இனிய குணம், பெரியோர்களிடம் மரியாதை, இன்னும் பல சீலங்கள் அமைந்த ஹிந்து பிற்பட்ட வகுப்பு 22 வயது எஸ்.எஸ்.எல். சி. பெண்ணிற்கு தக்க வரன் தேவை. சில ஆண்டுகளில் லட்ச ரூபாய் ஆஸ்தி பெறுவார். ஹிந்து எந்த சாதியும் சம்மதம். பெட்டி எண் 893.

வடமான், வாதூல கோத்திரம், ஹஸ்தம் நட்சத்திரம். நடுத்தரக் குடும்பம் பத்தாம் வகுப்பு. வயது 25. செவ்வாய் தோஷம். தகப்பனார் இடையாது. தமிழ் நாட்டில் ரூ. 500 வரை சம்பாதிக்கும் பிராமணப் பையன் தேவை. இரண்டாம் தாரம் பரவாயில்லை. சுமாரான வரதட்சிணை. பெட்டி எண் 894

சங்கிருதி கோத்திரம், ஐயர் பிரஹசரணம் பூராடம். பி. எஸ்ஸி. பாங்கில் பணி புரியும் 34 வயது 5'.2'' உயரமுள்ள பெண்ணுக்கு 38–40 வயதுக்குள் நன்கு படித்து நல்ல வேலையில் இருக்கும் மணமகன் தேவை. உட் பிரிவு சம்மதம். ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் 895.

## வெண்டை ரகசியம்

முற்றிய வெண்டைக் காயை ஏன் வாங்கி வந்தீர்கள் என்று கேட்பதை விட அதைப் பக்குவம் செய்ய நமக்குத் தெரிந்தால் எத்தனை நன்மை?

முற்றிய வெண்டைக் காயானால் தூக்கி எறியாமல் சிறான துண்டுகளாக்கி வெயிலில் இரண்டு நாள் உலர்த்துங்கள். வீணாகும் புளித்த மோரில் உப்பு, மிளகாய், பொடி போட்டு இரண்டு நாள் ஊற வையுங்கள். தேவைப்பட்டபோது கொஞ்சம் எண்ணெயில் வறுத்துச் சாப்பிடுங்கள். பிறகென்ன, முற்றிய வெண்டைக்காய் ரூபாய்க்கு மூணு கிலோ விற்கும் இடத்தைத் தேடி நீங்களும் போவீர்கள்.

– ரோஜி



குறுநாவல்

# குறுகலான சாலையில் பரபரப்பான விபத்துக்கள்

லட்சுமி ராஜரத்னம்



புடவையை ஓர் உதறு உதறி வீட்டின் முன் பக்கத்துக் கொடியில் உலர்த்தியபோது —சட்டென்று கனத்தது. கொடியில் போட்ட வேகத்தில் எதிரில் வந்த இளைஞனைக் கவனிக்காது.... பிரேமா தவித்துப் போனாள். நாணினாள்.

''ஓ.... ஸாரி.''

''ஸாரி... ப்ளீஸ்...''

அவரவர் தவறு செய்தது போலத் தவித்துப் போனார்கள். வேலியோரத்து மருதாணிப் பூ மணத்தது. அந்த இளைஞன் வேலியோரமாகப் போனான் பின் பக்கத்துக்கு. ஓ... இவன் பின் பக்கத்துக்குப் புதிதாக வந்த குடித்தனக்காரர்கள் வீட்டுப் பையனா?

–இவ்வளவு அழகா? அந்த உதடுகள்தான் எத்தனை சிவப்பு! பெண்களுக்குக் கூட இவ்வளவு சிவப்பு இருக்காது. நினைப்புக்குத் தானே சிரித்துக்கொண்டு வெட்கப்பட்டாள். மனதிற்குள் ஏற்படும் எண்ணங்களுக்கு விவஸ்தையே இல்லை. அதுவும் அவளைப் போன்ற கல்யாண வயதுப் பெண்களுக்கு கனவுகளுக்கும், கட்டவிழ்ந்த ஆசைகளுக்கும் பஞ்சமா என்ன?

ஜோடி ஜோடியாக உலா வரும் இளசுகளை கண்டு – தனக்கு வரப்போறவனைப் பற்றிய கற்பனையில்—

அவளுக்கு இது அலுக்காத நினைவோவியங்கள். கண்களை மூடிக் கொண்டு இருட்டில் தலையணையில் முகம் புதைத்துக் காணும் பொழுது – எத்தகைய குறுக்கீடுகளும் இல்லை சினிமாவானால் டைரக்டர்களின் குறுக்கீடுகள் இருக்கும். வீடானால் அம்மாவின் பொருமல்கள் இல்லை.

ஆசைகள் தொடர்ந்து, தொடர்ந்து, கடைசியில் முடிவு காணாமல் காற்று அழுத்திய பலூனாக வெடித்து விடுவது போல—

''பிரேமி, பிரேமி... இன்னுமா துணி உலர்த்தி முடியல்லே? புருஷன் வீட்லே போய் எப்படிக் குப்பை கொட்டப்போறியோ வச்சா வச்ச இடம்; போனாப் போன எடம். உருப்படறு மாதிரிதான்'' சித்திதான் கூடத்திலிருந்து உறுமினாள்.

''தோ, வந்துட்டேன்'' என்று குரல் கொடுத்த பிரேமா மீதித் துணிகளை உலர்த்தினாள்.

நிறை மாத சூலியாய் சித்தி கூடத்தில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தாள். இரும்புப் பக்கெட்டை முற்றத்தில் வைத்தாள் பிரேமா. உறுத்துப் பார்த்த சித்தி மதுரம் ''ராமுவும் உஷாவும் ஸ்கூலுக்குப் போகக் காத்துக்கிட்டு இருக்காங்க இல்லே? உடம்புலே சுறுசுறுப்பு வேணும்'' என்று முணு முணுத்தாள்.

இதெல்லாம் கேட்டுக் கேட்டு மரத்துப் போன வார்த்தைகள். அடுப்புக் குழம்பை ஒரு கிளறு கிளறினாள். உஷா சீப்புடன் வந்து நின்றாள். பிரேமா இரண்டு வாரு வாரி எலி வாலைப் போல பின்னினாள். பின்னல்கள் விரைத்து நின்றன. ராமு சும்மா இருக்கக் கூடாதோ?

''எலி வால்... எலி வால்'' என்று பின்னலை இழுத்தான். உஷா பின்னலைப் பிடித்துக் கொண்டாள்.

''போடா, இவனே... மூக்கொழுகி. எனக்கும் அக்கா மாதிரி ஆறப்ப நிறையத் தலைமயிரு வளரும். இல்லையாக்கா?''

கையை ஆட்டி ஆட்டி உஷா பேசினாள். இதைக் கேட்டதும் பிரேமாவின் வேதனை கூடக் குறைந்தது எனலாம். கன்னத்தில் குழி விழச் சிரித்தாள்.

''ஆமாண்டா கண்ணு, நீ அக்காவை விட ரொம்ப அழகா வருவே'' என்று கன்னத்தில் தட்டியதும், உஷாவின் முகம் மலர்ந்தது.

''எனக்கு எதாவது போடறியா இல்லையா. இப்படிச் செல்லம் கொடுத்துக் கொடுத்து இதுகளைக் குட்டிச்சுவராக்கிடுவே. தட்டை வழித்து நக்கிக் கொண்டே ஜெயா வெடுவெடுத்தான்.

ஜெயா பிரேமாவின் சொந்தத் தங்கை. வாசல் தாழ்வாரத்தின் ஓரம் பாலு – தம்பி, வாய் பேசாது. கோணை மூஞ்சியும் தானுமாய் உட்கார்ந்திருந்தான். பசிச்சாக்கூட கேட்க முடியாத ஜென்மம். அவனைப் பார்க்கப் பார்க்கப் பிரேமாவுக்கு அடி

வயிறு குமுறும். அவளாகப் பார்த்து வேளா வேளைக்குச் சாதம் போட்டால் உண்டு.

ஜெயாவுக்குச் சாதத்தைப் போட்டு விட்டு குழந்தைகளுக்குத் தட்டைப் போட்டுச் சாதத்தைப் போட்டாள். ஜெயா ஒரு கம்பெனியில் ஸ்டெனோ. சம்பாதிக்கிற திமிர் அவளது ஒவ்வொரு வார்த்தையிலும் பிரதிபலிக்கும். பிரேமாவின் பொறுமை இல்லே.

''டிபன் வைக்கட்டுமா ஜெயா?''

''என்ன டிபன்?''

''குழம்பு சாதம்தான். கலக்கட்டுமா?''

''வேற என்ன வெக்கப் போறே? எழவெடுத்த சாதம்தான்.''

வைப்பதா, வேண்டாமா என்று குழம்பினாள் பிரேமா. ''நான் கான்டீன்ல பாத்துக்கறேன்'' என்ற ஜெயா, அழகுப் பையை எடுத்துக் கொண்டு ஓடினாள்.

பழைய மாம்பலத்தின் நெரிசல்களை, அழுக்கு ரோடுகளைக் கடந்து, ஸ்டேஷன் பாலம் ஏறி, புது மாம்பலத்துக்கு போனால்-புது ஜாவாவில் மது காத்துக் கொண்டிருப்பான். புடவை மடிப்புக்கள் கலையாமல் பின்னால் ஏறிக் கொண்டாள். மௌண்ட் ரோடில் ஊர்வலம் வந்து — அவன் தோளில் தன் கையை வைத்து அழுத்தி, சொல்ற ஜோக்குகளுக்குச் சிரித்து—

இவளுக்குத் தன் வீடு, தம்பி, தங்கைகளைப் பிடிப்பதில்லே. அழுக்குப் பட்டாளம் என்ற எரிச்சல். மதுவின் வெள்ளை உடுப்பின் மீது மோகம் அதிகம். திலுணென்ற தோள்களும், மயிர் படர்ந்த மார்புத் திடலும் முன்னிரு பட்டன் போடாததினால் ஊசலாடும் தங்கச் சங்கிலியிலும் போதை தரும் அழகை அவள் உணர்வாள்.

கொஞ்ச நாட்களாகத்தான் ஊர்வலம் போக ஆரம்பித்திருந்தார்கள். மனத்திற்குள் ஊறும் அந்தரங்க ஊரல்களை பரிமாறிக் கொள்ள ஆரம்பிக்கவில்லே. அவனுக்கு அந்த வியவஸ்தை இல்லே. உணர்வைக் கிள்ளும் ஜோக்குகளை அவன் சடாரென்று அடிப்பான். இப்படி மெல்ல மெல்ல அவளை நெருங்கும் தந்திரம் அவனுக்குத் தெரிந்திருந்தது.

அவனை நெருங்கி வருவதில் அவளுக்கு ஒரு சுகம் தெரிந்தது. காதலிக்கிறேன் என்று வாயால் சொல்லாமல் மெல்ல உணர்த்தும் நயம் அவன் செய்கையில் இருந்தது. இரண்டு மூன்று தடவைகள் அவனுடன் ஹோட்டல்களுக்குப் போயிருக்கிறாள். கூட்டத்தில் தன்னுடையவன் என்ற உரிமையில் தோளில் கையைப் போட்டு நடத்திச் சென்றிருக்கிறான்.

இரண்டு நாட்களுக்கு முன்னால் சென்ற சினிமாவில் தன் தோள் மீது அவன் தலையைச் சாய்த்துக் கொண்டு காதருகில் கிசுகிசுக்க — அப்பாவை நினைத்தால் இந்தக் காதல் நிறைவேறுமா என்ற பயத்தில் நெஞ்சு அடித்துக் கொள்ளும்.

தங்கவேலு மானஸ்தர். மூத்த பெண்டாட்டி மீனுவின் மீது உயிரையே வைத்திருந்தார். எட்டாவது வரை வகுப்பெடுக்கும் ஒரு வாத்தியாரிடம் என்ன சுகத்தைக் கண்டு விட முடியும்? இப்படி மீனு நினைக்கவில்லே. இரண்டு பெண்கள், வறுமை, நோயைக் கொண்டு வந்தது. அடிக்கடி அபார்ஷன் ஆன உடம்பால் தாங்க முடியவில்லே.

பத்தும், எட்டுமாகக் குழந்தைகள் தங்கள் தாயை இழந்தன. ஒருசில வருடங்கள் தனியாகக் கழித்தார். பிரேமா வயதுக்கு வந்தாள். வீட்டில் பெண் துணை அவசியம் என்று தெரிந்தது. மதுரம் இளையவளாக வந்தாள். வயிற்றிலும் கையிலுமாக குடும்பம் பெருகியது. பிரேமா எஸ். எஸ். எல். சி. யுடன் நிறுத்திக் கொண்டாள்.

ஜெயாவையும் அத்துடன் நிறுத்தினர் தங்கவேலு. டைப், ஷார்ட்ஹேண்ட் படித்தாள் ஜெயா. இயற்கையிலேயே கெட்டிக்காரி. படிப்பும் நன்றாக வந்தது. பெண் வேலைக்குப் போவது தங்கவேலுவுக்குப் பிடிக்காது.

''நீ ஒண்ணும் வேலைக்குப் போக வேணாம்'' என்று சீறினர்.

ஜெயா துடுக்குக்காரி. ''வீட்டிலேயே உட்கார்ந்து பத்துப் பாத்திரம் தேய்க்கச் சொல்றியா அப்பா?'' என்று கேட்டாள்.

''அதான் பெண்களுக்கு முக்கியம் அம்மா.

ஜெயா தந்தையைக் கூர்ந்து பார்த்தாள். கூர்மையான அம்புகள் புறப்பட்டன. ஏற்கனவே அழகான கண்கள். அதிலும் மை தீட்டியிருப்பதால் அகன்று விசாலமாய் இருந்தன.



''ஆண்களுக்கு என்னப்பா முக்கியம்?''

எதைக் கேட்கிறான் என்று புரியாமல் சற்று தவித்தார். ''என்னம்மா சொல்றே?''

''பொம்பளைங்க பத்து தேய்ச்சிடலாம். வேலைக்குப் போனாலும் அந்தக் காரியம் ஒண்ணும் நிக்காது. பிரேமாவுக்கு வரன் பாக்கறீங்களா? கல்யாணத்துக்குன்னு என்ன சேர்த்து வச்சிருக்கீங்க?''

பெண்கள் சுதந்திரம் அதிகமாகப் போன மாதிரி அவருக்குப் பட்டது. செங்கல்பட்டு வரன் பெண் பார்த்துவிட்டு லிஸ்டை நீட்டியதும் அவர் என்னமாய் திண்டாடினார்! தன் கணவர் இந்தச் சின்னப் பெண்ணிடம் பதில் சொல்லாமல் தலை குனிவது மதுரத்திற்குப் பிடிக்கவில்லை.

''என்னடி ஜெயா, அப்பாவை என்னெல்லாமோ கேட்டுக்கிட்டு... கொஞ்சம் கூட அடக்கம் இல்லே'' என்றாள்.

சித்தியின் அதட்டலை லட்சியம் செய்யவில்லை ஜெயா. ''நீ சும்மா இரு சித்தி. உனக்கும் நாலு குழந்தைகள் ஆச்சு. இப்ப நான் கேட்கிற கேள்விகள் எனக்கும், பிரேமாவுக்கும் மட்டுமல்ல. உன் குழந்தைகளுக்கும் சேர்த்துத்தான்.'

மதுரம் வாயடைத்துப் போனாள். தன் குழந்தைகளின் எதிர்காலம் பயங்கரமாகத் தெரிந்தது. கன்னி கழிந்தால் போதும் என்று கழுத்தில் ஏறிய தாலியின் கனம் இப்போதுதானே தெரிகிறது. தங்கவேலு தலையை நிமிர்த்தவில்லை. ஜெயா துணிந்து படித்து வேலையையும் தேடிக் கொண்டாள்

முதல் சம்பளம் வாங்கிய தினம்—

கம்மியான விலையில் அனைவருக்கும் துணிகளை வாங்கி, இனிப்புப் பொட்டலங்கள், மசால் தோசை என்று வீட்டையே அதிர வைத்தாள். பெண்ணின் சம்பளம் வீட்டில் ஒரு சௌந்தரியத்தை உண்டாக்குகிறது என்பதைத் தங்கவேலு உணர்ந்தார். மதுரம் கூட தன் அதட்டலை ஜெயாவிடம் காட்டுவதில்லை.

என்றைக்குமே ஜெயாவிற்கு நன்றாக உடுத்திப் பூச்சூட்ட வேண்டும். வீட்டிற்கு முன்னால் உள்ள இடத்தில் மண் தரையில் கனகாம்பரம் போட்டிருந்தாள். தொடுத்து தன் தலையில் வைத்துக் கொண்டு கிளம்பி விடுவாள். சம்பாதிக்கும் நிலை கர்வத்தை நன்றாக வளரவிட்டிருந்தது. தன் சம்பாத்தியத்தில் இவர்கள் கொஞ்சம் வசதியாக இருக்கிறார்கள் என்ற எண்ணம். அது உண்மைதானே?

ஜெயா கிளம்பிப் போன பின்பு பிரேமா மற்ற வேலைகளைக் கவனித்தாள். தூளிக் குழந்தை சிணுங்கியது. தரையில் படுத்துக் கிடந்த மதுரம் கயிற்றை எட்டி எடுத்து தூளியை வீசினாள். என்றும் இல்லாத அசதி. டாக்டர் அம்மா இன்னும் இரண்டு வார கெடு வைத்திருக்கிறாளே!



## கேள்விப்பட்ட பல சீஸ்களில் ஒன்று—அமுல்சீஸ்
## ஒருமுறை அது சுவைக்கப்பட்டது,
## மறக்கப்பட்டன மற்றவை.




### அமுல் சீஸ் ஷாஹி மட்டன் சாப்ஸ்
### ஒருமுறை தயாரித்துப் பாருங்களேன்!

**அமுல் சீஸ் ஷாஹி மட்டன் சாப்ஸ்**
(சுமார் 14 தயாரிக்க)

½ கிலோ மட்டன் சாப்ஸ் தனித்தனி துண்டுகள்
1 கோப்பை பால்
1 வெங்காயம்—சன்னமாக பெரிய கீற்றுகளாக நறுக்கப்பட்டது.
2 பெரிய உருளைக்கிழங்குகள்—அவித்து தோலுரித்து மசிக்கப்பட்டவை.
4 பச்சை மிளகாய்—பெரிய துண்டுகளாக நறுக்கப்பட்டது.
1 தேக்கரண்டி கரம் மசாலா.
1 சிறிய பச்சை கொத்த மல்லிக் கட்டு—பொடியாக நறுக்கப்பட்டது.
2 எலுமிச்சம்பழச் சாறு.
100 கிராம் அமுல் சீஸ்—சீவப்பட்டது.
1 முட்டை.
2 ரொட்டித் துண்டுகளின் தூள்.
பொரிப்பதற்கான எண்ணெய்.
அழகுப்படுத்துவதற்கான வெள்ளிக் காகிதம்

மட்டன் சாப், அதன் எலும்பிலிருந்து மாமிசம் பிரியும் அளவுக்கு பால் மற்றும் வெங்காயத்துடன் சேர்த்து அதை கொதிக்க வைக்கவும். சிறிதளவுகூட நீர் மிஞ்சாது. எலும்பிலிருந்து மட்டனையும் கொழுப்பையும் பிரிக்கவும். கொழுப்பை எறிந்து விடவும். எலும்பை தனியாக வைக்கவும். மாமிசத்தை பெரிய துண்டுகளாக நறுக்கவும்.

மாமிசத்துடன், உருளைக் கிழங்கு, பச்சை மிளகாய், பச்சைக் கொத்தமல்லி, எலுமிச்சம் பழச்சாறு ஆகியவற்றைச் சேர்க்கவும். பின்பு, அத்துடன் கரம் மசாலா, உப்பு மற்றும் சீஸ் சேர்க்கவும். பின்பு, எலும்புகளின் எண்ணிக்கை அளவு மாமிசத்தை பிரித்துக் கொள்ளவும். அதன் எண்ணிக்கை சுமார் 12-14 இருக்கும். எலும்பின் மேல் பகுதி இணைப்பை பிரிக்கவும், இப்போது மீதி இருப்பது நேரான எலும்புகள். இந்த எலும்பில் மாமிச உருளைக் கிழங்கு மசாலாவை நீண்ட வடிவில் சுற்றவும்; 3 சென்டி மீட்டர் எலும்புப் பகுதி காணப்படும் அளவுக்கு விட்டு மீதிப் பகுதியைச் சுற்றவும்.

நன்கு கலக்கப்பட்ட முட்டையில், ஒவ்வொரு ஷாஹி மட்டன் சாப் துண்டையும் நன்கு நனைக்கவும். அதன்மீது ரொட்டித் தூளைப் பரப்பவும். பின்பு தாராளமான நெய் அல்லது எண்ணெயில் அவற்றை சிவப்பாகும்வரை மொருமொருப்பாக வறுக்கவும். நீட்டிக் கொண்டிருக்கும் எலும்புப் பகுதியில் 3 x 2 சென்டி மீட்டர் அளவிலுள்ள வெள்ளிக் காகிதம் சுற்றவும். சூடாகப் பரிமாறவும் புதினாச் சட்னியுடன் சேர்த்து.

**புதினாச் சட்னி**

1 சிறிய கட்டு பச்சைப் புதினா—இலைகளை ஆய்ந்து கழுவப்பட்டது.
2 நடுத்தரமான வெங்காயம்—பெரிய துண்டுகளாக நறுக்கப்பட்டது
10-12 பச்சை மிளகாய்—காம்பு நீக்கப்பட்டது.
1 மாங்காய் (உங்கள் சுவைக்கேற்ப)—தோலைச் சீவி உள்ளிருக்கும் விதையை எடுத்து விட்டு, துண்டுகளாக நறுக்கப்பட்டது.
அல்லது ஒரு மேசைக் கரண்டி மாதுளை முத்துக்கள்.
1 தேக்கரண்டி சீரகம்.
1 தேக்கரண்டி உப்பு.

இவற்றை அரைத்து சிறிது பசைபோல் ஆக்கவும். இப்போது புதிய புதினா சட்னியை பரிமாறவும்.

அமுல் சீஸ் மிகவும் சிறந்தது. அது ஒவ்வொரு தின்பண்டத்துக்கும் அதிக சுவையும் போஷாக்கும் அளிக்கின்றன. அதில் எளிதில் சீரணமாகும் 23% புரதம் அடங்கியுள்ளது போதுமான கால்ஷியமும் வைட்டமின் ஏயும் நிறைந்துள்ளன அதோடு, இதை சுவைப்பதால் ஏற்படும் இன்பமே அலாதி!

## அமுல் சீஸ்




ASP/AC-6/86



குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெட்டிங் ஃபெடரேஷன் லிமிடெட், தபால் பெட்டி எண். 10, ஆனந்த் 388 001 குஜராத் மாநிலம்.

தூளியின் வீசலுக்குக் குழந்தை அசைய வில்லை. பசி வீறிட்டது.

''டீ, பிரேமி, என்ன பண்றே?'' மதுரம் குரல் கொடுத்தாள்.

''பாலுவுக்குச் சாதம் பிசையறேம்மா'' என்று பதில் சொன்னாள் பிரேமா.

''அதுக்கு என்ன இப்ப அவசரம்? குழந்தை அழறது பார். எனக்கு முடியலேடி. டாக்டர் சொன்ன கெடுவரை வராதுனு தோணறது. சரி சரி. குழந்தைக்குக் கஞ்சியைக் கொண்டு வா.'' என்று மதுரம் சிடுசிடுத்தாள்.

பிரேமா இறுகிய கஞ்சியில் சிறிது நீரைச் சேர்த்துச் சர்க்கரை போட்டு பாட்டிலில் விடத் தொடங்கினாள். அவள் மனத்தில் மதுரம் அந்த வீட்டிற்குள் நுழைந்த நாள் ஓடியது.

தங்கவேலு அதிகாலையில் எழுந்து குளித்து விட்டுக் கிளம்பினார். கால்கள் தயங்கின. தூங்கும் குழந்தைகள் எழுந்ததும் தன்னைத் தேடுமே என்ற வேதனை. அவர் கிளம்புவதை அறிந்த பக்கத்து வீட்டு அம்மாள் வந்து விட்டாள்.

''இன்னும் என்ன நிக்கிறீங்க? கிளம்புங்க. நல்ல சகுனம். பால்காரன் வரான்... ம்... நேரமாச்சு'' என்று அவசரப்படுத்தினாள்.

''குழந்தைகளை விட்டுட்டுப் போனதில்லே அதுதான் மனசை என்னமோ செய்யுது. ரெண்டாம் கல்யாணம் பண்ணிக்கிறது தப்போன்னு மனசு அலைபாயறது'' என்றார் தழுதழுத்த குரலில்.

''இத பாருங்க. ஒரு காரியம் செய்யறதுன்னு முடிவுக்கு வந்தாச்சு. வயசுக்கு வந்த பிள்ளைகளை துணையா வச்சுக்கணும்னு ஏற்பாடு பண்ணியிருக்கீங்க. நீங்களும் மீனுவும் நகையும் சதையுமா வாழ்ந்ததை நான் பாக்காதவளா என்ன? கிளம்புங்க. கோயில்ல இன்னும் மாப்பிள்ளை வரல் லேன்னு காத்துக்கிட்டு இருப்பாங்க.''

தங்கவேலு தயங்கித் தயங்கி நடந்தார். ரோட்டை அடைந்து ஓர் ஆட்டோவை பிடித்ததும், முகூர்த்த நேரம் நெருங்கி விடும் அவசரத்தில் தயக்கம் ஓடி விட்டது. திருநீர்மலையில் குளிர்ந்த இளம் காலையில் மதுரத்தின் கரத்தைப் பிடித்ததும் ஓரளவு அவர் மெய் மறந்து போனார் என்றே சொல்லலாம்.

குழந்தைகள் எழுந்ததும் — ''உங்களுக்கு ஓர் அம்மாவை அப்பா கூட்டியாரப் போறார்' என்று வீட்டுக்காரம்மாள் சொன்னதும்—புரிந்தும் புரியாத நிலையில் பிரேமா ஜீரணித்துக் கொண்டாள்.

''எங்கம்மா தான் செத்துப்போயிட்டாளே வரவ எங்களுக்குச் சித்தி. அவ எங்களை ரொம்பக் கொடுமைப் படுத்துவா. ஐயோ. எனக்குச் சித்தி வேண்டாமே'' என்று பெரிதாக ஒலமிட்டு ஜெயா ஊரைக் கூட்டினாள்.

''ஜெய்பி, அழாதேடீ. நீ அழுதா எனக்கும் அழுகை வரது. அப்பா நம்பளை

சளி மறைய

நல்ல மிளகைப்பால் விட்டு அரைத்துக் கொதிக்க வைத்து அதை நெற்றியிலும் தொண்டையிலும் தடவினால் சளி உடனே குறைந்து அப்புறம் முழுமையாய் குணமாகிவிடும்.

ராஜேஸ்வரி



நன்றி: சித்தமருத்துவம்

சித்தி கொடுமைப் படுத்தாமப்பார்த்துப்பா'' என்று பிரேமா சமாதானம் சொன்னாள்.

பிரேமா கையை ஜெயா கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள். வீட்டுக்கார அம்மாள் குழந்தைகளின் பேச்சை அதிர்ச்சியுடன் கேட்டுக் கொண்டிருந்தாள். ஜெயாவும் பிரேமாவும் சித்தி என்ற கொடிய ராட்சசியை வரவேற்கக் காத்திருந்தனர்.

—இதை ஒன்றும் அறியாத தங்கவேலு மதுரத்தின் கழுத்தில் அமர்க்களமாகத் தாலியைக் கட்டினார். மாலை மதுரத்துடன் வீட்டிற்கு வந்ததும் ஜெயா அழுது அமர்க்களப்படுத்தினாள். மதுரத்தை அம்மா என்று அழைக்கக் கட்டளை இட்டார். ஜெயா மறுத்துவிட்டாள். பிரேமா மட்டும் 'அம்மா' என்றோ சில சமயங்களில் 'சித்தி' என்றோ கூப்பிடுவாள்.

மதுரத்தின் எரிச்சலையும் ஏமாற்றத்தையும் பிரேமாவால் உணர முடிந்தது. தங்களுடன் புதிதாக ஒரு ஜீவன் வறுமையில் வாட வந்ததைப் பற்றிப் பரிதாபப்பட்டாள். ஜெயாவுக்குத் தன் தேவைகளே பெரிதாகப்பட்ட பொழுது மற்றவர்களைப் பற்றிச் சிந்திக்க ஏது நேரம்?

வந்த சுருக்கில் இரண்டு குழந்தைகளை முழுசாகப் பெற்று — இரண்டைக் குழிக்குத் தானமிட்டு — கையில் ஒன்றையும் இன்று வயிற்றில் ஒன்றும் என்று சுமந்துகொண்ட மதுரத்திடம் பிரேமாவால் என்ன கோபத்தைக் காட்ட முடியும்?

வந்த பையன்களுக்கு வணங்கி, 'இவன் தானோ எனக்குப் புருஷன்?' என்ற கற்பனைக்கு மெருகிட்டு, கடைசியில் நைந்து, வெம்பி, 'சீ, இந்தப் பழம் புளிக்கும்' என்ற ஏக்கம் நெஞ்சை அடைக்க அவள் வெதும்புவது யாருக்குப் புரியும்?

பாலுவுக்குச் சாதம் போட்டு விட்டு மதுரத்திற்கும் உட்கார்ந்த இடத்திலேயே சாதம் போட்டுவிட்டுக் கடைசியில் சாப்பிட உட்கார்ந்தாள். மதுரம் உண்ட மயக்கத்தில்

கவரோரத்துப் பெஞ்சில் ஏறிப் படுத்துக் கொண்டு குறட்டை விட்டான். பிரேமா விற்கு ஏனோ சாதம் இறங்க மறுத்தது.

என் வாழ்க்கை இப்படியேதான் போய் விடப் போகிறதா?

'வைகறையில் வைகைக் கரையில்' — கணீரென்ற குரலில் எழுந்தது பாட்டு. அட, மணி பன்னிரண்டா? ரேடியோ வைக்கும் நேரம் ஆகிவிட்டதா? உற்றுக் கேட்ட பொழுதுதான் பின் பக்கத்து வீட்டிலிருந்து குரல் வருவது புரிந்தது. சட்டென்று காலையில் பார்த்த வாலிபன் மனத்திற்குள் நுழைந்து நின்றான்.

அவனுக்கா இத்தனை வளமான குரல்? தன்னை வா, வாவென்று அழைப்பது போல—

"இலைவடாம் செய்யும்போது அந்த மாவுடன் ஆவக்காய் ஊறுகாய் சாறையும் கலந்து தயாரித்தால் அது காய்ந்தவுடன் வெகு ஈஸியாக உரிக்க வரும். அத்துடன் அதன் சுவை காரத்துடன் சேர்ந்து வெகு அருமையாக இருக்கும்."

—ஜெயா

மனத்துக்குள் ஏற்படுத்தும் சங்கடங்களை அக்குரல் தாபத்தைக் கிளறிக் கிளறி... கண்ணீர் ததும்பச் சாப்பிடப் பிடிக்காமல் எழுந்து விட்டாள். முற்றத்தில் தட்டைப் போட்டாள். பின் போர்ஷன் ஜன்னல் நன்கு தெரியும்.

அவனைத் தேடிப் பார்வை அலைந்தது. ஒருவேளை பாடியது அவனாக இல்லாவிட்டால் தன்னால் தாங்க முடியாதது போல ஒரு பிடிவாதம் நெஞ்சைச் நுனைத்தது. 'எனக்காகவா பாடினீங்க, இதோ வந்துட்டேன். இன்னும் பாடுங்க. ப்ளீஸ்' என்று கூறவேண்டும் போலப் பரபரத்தது. இன்றைக்கு மனம் ஏன் இப்படிப் பறக்கிறது? அந்த இளைஞன்தான் காரணமா?

முற்றத்தின் வெய்யிலில் சாய்ந்து நின்றும் அந்த இளைஞனை அவளால் காண இயலவில்லை. பாட்டுக்கள் துணுக்கு துணுக்குகளாக வந்தபடி இருந்தன. வெய்யிலைப் பொருட்படுத்தாது அவள் பாத்திரங்களைத் துலக்கினாள். பிறகு உள்ளே கொண்டுவந்து வைத்தாள். இடையே பார்வை ஜன்னலைத் துழாவியது. பாட்டும் ஓய்ந்தது. அந்த வீட்டில் அமைதி தவழ்ந்தது. அந்த அமைதியை அவளால் சகிக்க முடியவில்லை.

கடற் கரை மணலில் ஒருவரும் வராத பகுதியில் அமர்ந்திருந்தார்கள் ஜெயாவும் மதுவும். மெல்லிய இருட்டு பரவியது. ஜெயாவின் கரத்தை எடுத்துத் தன் கரத்தின் மீது வைத்துக் கொண்டான் மது. கொஞ்சம் நகர்ந்து கொண்டான்.

"ஜெய், பேசமாட்டியா?" மது கெஞ்சினான். கையை அழுத்தினான். "இப்படியே எத்தனை நாள் பார்த்துக்கிட்டே இருக்கிறதாம்?"

உதட்டைக் கோணிப் பழித்தாள் ஜெயா. "வேற என்ன செய்ய முடியும்?"

"என்ன செய்யணும்னு உனக்குத் தெரியாது? நீ என்ன பச்சாவா?" குறும்புடன் கண்களைச் சிமிட்டினான்.

"தாலி கட்டிக்கணும். என்னை உங்களுடையவளா ஆக்கிக்கணும்."

மெல்ல விசிலடித்தான். "சின்ன ஐடியா. தாலி கட்டாம என்னுடையவளா ஆக மாட்டியா?"

"மாட்டேன்."

"ஷ்யூர்."

"பிராமிஸா."

"சரி: சாலஞ்ச். தாலி கட்டாம உன்னை என்னுடையவளா ஆக்கிக்கிறேன். பாக்கிறியா? மது, மதுன்னு சுத்தி வந்து தேடணும்."

"நடக்காது மிஸ்டர். நீங்கதான் ஜெய், ஜெய்னு என்னைச் சுத்தி வரணும்."

"பார்க்கலாமா?" முகத்தில் சினத்தின் சிவப்பு ஏற எழுந்து விட்டான் மது. அவள் அதையும் ரசித்தாள்.

எழுந்த வேகத்தில் கிண்ணென்று நின்றான். பனியன் உடலைக் கவ்வியது. நெஞ்சில் இளங் காதலர்களின் ஓவியம் ஒன்று. அவர்களைச் சுற்றி 'ஐ லவ் யூ' என்ற எழுத்துக்கள்.

மதுவுக்கு இவ்வளவு கோபமா?

"உட்காருங்க மது."

"நோ...நோ.. இன்னிக்குச் சொன்னதுதான். உன் கழுத்திலே தாலி கட்டறதுக்கு முன்னாடி நீ எனக்குச் சொந்தமாகணும்." என்று தணிந்த குரலில் கனமாகச் சொன்னான்.

"தாலி ஏறினால்தான் நான் உங்களுடையவள்" என்று மென்மையாக, ஆனால் உறுதியாகக் கூறினாள் அவள்.

"சரி: எழுந்திரு. உன்னை ட்ராப் பண்ணிட்டுப் போகிறேன்."

ஆண் உடலின் அவசர வேட்கை அவளுக்குப் புரியாத இலக்கணம் ஆயிற்றே. அதனால் அவள் பிடிவாதமாக எழுந்து நின்று உர்ரென்று ஓடும் அவன் பின்னால் ஓடினாள்.

நாலு மாறுகக் கிடந்த குழந்தைகளை எடுத்து வரிசையாகப் படுக்க வைத்தாள் பிரேமா. இன்ப ரகசியங்கள் மனத்தினுள் நாதஸ்வரம் வாசித்தன. ஸஹானாவா, ஸாவேரியா, ஆனந்த ராகம்! காதல் கீதத்தின் ஜீவ ஸ்வரமாக...

# இவ்வளவு ஆசையாக அவள் பாயசம் சாப்பிடுவதை நான் பார்த்ததே இல்லை...

இதுவரை கண்டதில்லை
இது போன்ற சேமியா :

- தரம் மிகுந்த மைதா மாவினால் தயாரிக்கப்பட்டது.
- சமைக்கும்போது பசைபோல ஒட்டிக்கொள்வதில்லை.
- நவீன இத்தாலிய எந்திரங்களினால் சுகாதாரமான முறையில் தயாரிக்கப்படுவது.
- சுவையான பாயசம் தயாரிக்க மிகவும் ஏற்றது.

இப்போது!

**பிஸ்கட் தயாரிப்பாளர்கள் அளிக்கும் சிறந்த சேமியா**




HTM-AFL-2866

ஆனந்த்....

பார்வை பரிமாறல்கள் முடிந்து முத்து உதிர்த்தாற் போல பேசி... எத்தனையோ பேச வேண்டும் என்ற ஆவல் அடங்காமல் ஜென்ம ஜென்மாந்திரமாகத் தொடர்ந்த தொடர்பு போல... பார்வை போதாமல் இளம் சிரிப்பை ஒரே கணத்தில் சிரித்து

இன்று மாலை அவள் டைப்ரைட்டிங் இன்ஸ்டிட்யூட்டிலிருந்து வரும் சமயம் எதிரே ஆனந்த் வந்து விட்டான். ஒரிரு வார்த்தைகள் பேசியதில் ஆசை அடங்கவேயில்லை.

'பிரேம்' இதயத்தை வருடும் நயம் கலந்த தொனி.

அவள் சட்டென்று நின்றாள். காய் கடை அருகில் நின்றதால் காய் வாங்கும் சாக்கு

''என்ன?''



**மாவு பொங்காது இருக்க!**

தோசைக்கோ, இட்டிலிக்கோ மாவு அரைத்து வைத்து இருக்கிறீர்கள். மறு நாள் 'புஸ்' என்று பொங்கி வழிந்து நிற்கிறது. இதைத் தடுக்க என்ன வழி? வாழை இலையின் நரம்பை (பெரிய இலையாக இருந்தால் நடுவில் பிரித்தெடுக்கிறோமே, அந்த நரம்புதான்) இனி, மாவு அரைத்தவுடன் போட்டு விடுங்கள். பொங்குவது நின்றுவிடும். மாவும் கெடாது. மல்லிகைப் பூ போல மிருதுவான இட்டிலி தயாரிக்க உதவும்.

—சிவமதி

''உங்கிட்ட நிறையப் பேசணும்.''

''புடலங்காய் என்ன விலை? என்ன பேசணும்?''

''இப்பப் புடலங்காய் வாங்கறே. அதை என்ன பண்ணப் போறேன்னு பேசணும்.''

அவன் சிரிப்பை அடக்க முடியாமல் தவித்தான்.

''இப்படிச் சிரிக்கச் சிரிக்கப் பேசி என்னைப் பைத்தியமா அடிக்காதீங்க.''

''நாளைக்கு ஃப்ரெண்ட் வீட்டுக்குப் போறேன்னு சொல்லிட்டு பீச்சுக்கு வரியா?''

''ஐயையோ.''

''உஷ்...காய்க்காரி பார்க்கிறாள். ஏதோ தப்பாச் சொன்ன மாதிரியில்ல பரபரக்கிறே? உன்னைப் பார்த்துக்கிட்டே இருக்கணும் போல இருக்கு பிரேம்.''

'எனக்கும் அப்படித்தான்' என்று சொல்ல முடியாமல் — ஆணிலிருந்து வித்தியாசப் பட்டுப் போனாள். அவனுடைய தவிப்பை அவள் உணராதவளா? கண்டிப்பாக வருவதாகச் சொல்லி விட்டாள். ஆனால் போகும் வரை மனத்தைப் பிடித்து ஆட்டும் பயம்... கண்களை மூடிக் கொண்டு படுத்தாலும் நெஞ்சு போடும் பய தாளத்தில் தூக்கம் வரவில்லை.

ஜெயா கண்களை மூடி ஒரே விழியால் பிரேமாவைப் பார்த்தாள். கண்ணுக்குள் கனவு காணும் பிரேமாவைப் பார்க்க முடியவில்லை. யாராவது வந்து தனது கன்னித் தன்மையைத் தானம் வாங்க மாட்டார்களா என்று எதிர்பார்த்த பிரேமாவை—

காலையில் யந்திரமாகச் சுழலும் பிரேமாவை — ரேஷனுக்கு க்யூவில் அலுக்காமல் நெற்றியில் வியர்வை வழிய வழிய நிற்கும் பிரேமாவை — கடச் சுடக் குழம்பையும் காயையும் மற்றவர்களுக்குப் பரிமாறி விட்டு ஊறுகாயுடன் சாதத்தை உருட்டி விழுங்கும் பிரேமாவை—

அவள் அறிவாள். ஆனால் சில தினங்களாக ஒருவனின் காதலைப் பெற்ற பிரேமாவை அவள் எப்படி அறிவாள்? இன்று பிரேமாவை பார்த்து ஜெயாவுக்குப் பெருமையாக இருந்தது. எந்தக் கவலையும் இல்லாமல் எப்படித் தூங்குகிறாள் பார்! தன்னைப் போலக் காதலித்து — மது இன்று எப்படி எடை போட்டு விட்டான்?

இப்படி இரண்டு பேரும் ஊடிக் கொண்டு நின்றால் கல்யாணம் எப்படி நடக்கும்? நினைக்கும்பொழுதே திகிலாக இருந்தது. மதுவுக்கு ஏன் இந்தப் பிடிவாதம்? அவன் இப்படியெல்லாம் சொல்வதனால் அவனை வெறுக்க அவளால் முடியுமா? — முடியாது — முடியாது!

கண்ணீர்ச் சரங்கள் தலையணையில் நீர்க்கோலமிட்டன.. அருகருகே படுத்திருக்கும் இருவரின் எண்ணங்களுக்குத்தான் எத்தனை வித்தியாசம்? ஒருத்தி இன்ப நினைவுகளால் தூங்காமல் தவிக்கிறாள். ஒருத்தி துன்பத்தில் உழன்று தூக்கம் பிடிக்காமல் தவிக்கிறாள்.

சின்னக் குழந்தை போல் மணலை வாரிக் குவித்துக் கொண்டிருந்த பிரேமாவின் கரத்தைப் பற்றினான் ஆனந்த்.

''நீ என்ன குழந்தையா?''

''எனக்கு பீச்சுக்கு வரதுன்னா ரொம்பப் பிடிக்கும்.''

அவன் கண்கள் இவளையே ரசித்துக் கொண்டு பிடிவாதம் பிடித்தன.

''உனக்கு என்னைப் பிடிக்கிறதா பிரேம்?''

''பிடிக்காமயா இங்கே வந்தேன்?''

''அது சரி, உங்க வீட்டிலே இருக்கிறது உங்க சித்தியாமே?''

''எனக்கு அம்மா இல்லே.''

அவன் முகத்தில் வந்து மோதிய பரிதாபத்தைப் பார்த்தான். ''நீ ரொம்ப அழகா இருக்கே. உன் மூஞ்சியிலே ஒரு

இன்னசென்ஸ் இருக்கு. அது எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு.''

அவள் வெட்கப்பட்டாள்.

''இவ்வளவு அழகான ஒருத்தி எனக்குக் காதலியாக் கிடைச்சதை நினைச்சு ரொம்பப் பெருமைப்படறேன்.''

அவளுக்கும் ஏதாவது ரெண்டு வார்த்தை பெருமையாச் சொல்ல ஆசையா இருந்தது. ஆனல் வார்த்தைகள் வரவில்லை. தலையைக் குனிந்து கொண்டாள்.

''எனக்காகக் காத்துக் கொண்டிருப்பியா?

''எவ்வளவு காலம்?'' கண்கள் கேட்டன.

''எனக்கு ஒரு தங்கை, கல்யாணம் ஆக ணும். ஓர் அண்ணு. அவனுக்கும் கல்யாணம் ஆகணும். எனக்கு வேலை கிடைக்கணும். படிப்பை முடிச்சு மூணு வருஷம் ஆச்சு. இன்னும் வேலை கிடைக்கல்லே.''

''அதனுல என்ன? நீங்க குடிக்கிற கஞ் சியைக் குடிக்க நான் தயார் ஆனந்த்'' என்று படபடத்தாள் பிரேமா.

''அந்தக் கஞ்சிக்கும் வழி வேணும் பிரேமா. இதுவரைக்கும் கவலைப்பட்ட தில்லே. உன்னைப் பார்த்த கணத்திலிருந்து என் ஆசைகள் – எதிர்கால எதிர்பார்ப்புகள் எல்லாம் இந்தக் கடல் மாதிரி விரிஞ் சிட்டே போறது.''

அவள் மௌனமாகக் கேட்டுக் கொண் டிருந்தாள். அந்தக் கணத்தில் அவளுக்கு எல்லாமே மறந்து போய் விட்டது. அவ னுடைய காதல் சாம்ராஜ்யத்தின்ராணியாக இருந்தாள். வறுமை ஒரு பொருட்டாக இல்லே. அவனுக்காக எதையும் துறக்கச் சித்த மாக இருந்தாள்.

'எனக்கு நீங்க இருந்தாப் போதும்' என்ற பேதமை ஆசை நெஞ்சில் துள்ளிக் குதித்தது. காதலி மனைவியாக ஆனல் ஏற்படும் சுமைகள் அவளுக்குப் புரியவில்லை.

''கடைகள்லே தொங்கற நல்ல புடவை களை யெல்லாம் உனக்குக் கட்டி அழகு பார்க்கறேன். நகைகளை எல்லாம் போட்டுப் பார்க்கறேன். இம்பாலா கார்லே உங்கூட ஊர்வலம் வரேன். எல்லாம் கற்பனையில் தான் பிரேம். ஒரு நாள் என் ஆசை நிச் சயம் நிறைவேறும்.''

அவளும் அந்தக் கனவுகளில் திளைத்தாள். இனிய போதை இதயத்தை மதுக் கோப்பை யாக்கி நிறைத்தது. கண்களில் ஆசை வழிந்தது.

''நீ எனக்காகக் காத்திண்டு இருப்பியா பிரேம்.''

''நிச்சயமாக.''

மனமில்லாமல் அவள் வீட்டுக்குக் கிளம் பினள்.

**ஜெ**யாவின் கலகலப்பெல்லாம் வடிந்து விட்டது. குழந்தைகளை அதட்டுவதில்லே. கஞ்சி போடாத புடவைகளுக்காக பிரேமா விடம் சண்டை போடுவதில்லே. ஏன் டிபன்



வெய்யில் காலத்தில் குழந்தை களுக்கு 'அக்கி' (வேனல் கட்டிகள்) வந்தால் பசுவின் பால், பப்பாளிப் பழச்சாறு இவை இரண்டையும் கலந்து தேய்க்க குணம் ஏற்படும்.

-கோகு

பண்ணுவதில்லே என்று கத்துவதில்லே. மது ரம் ஏதாவது சொன்னல் மல்லுக்கு நிற்ப தில்லே.

தனக்குள் மதுவுடன் ஊடிக் கொண்டே 'நீங்க சொல்றது சரின்னு உங்களுக்கே படறதா மது? தப்பு மதுன்னு புலம்பிக் கொண்டு என்ன சொல்லி மதுவின் மனசை மாத்தலாம் என்று எண்ணத்தைப் புரட்டிக் கொண்டு–

தன் வழிக்கு வராவிட்டால் தனக்கும் அவளுக்கும் சம்பந்தம் இல்லே என்பதுபோல் மது நடந்து கொண்டான். மறு தினமே மது சொல்வது தப்பு என்று வாதாட அவ னுக்குப் போன் பண்ணினள்.

''எப்ப வரே ஜெய்! எங்கே மீட் பண்ண லாம்? க்ராண்டா செலிப்ரேட் பண்ணலாம்? என் ஆசை உனக்குப் புரியறதா ஜெய்?''

அவள் மனதுக்குள் உடைந்து போனள்.

''இது தப்புன்னு உங்களுக்குத் தெரி யலேயா மது? நான் எப்பவுமே உங்களுடைய வள்தான் – மனசைப் பொருத்தவரை. ஆன ஊர் உலகம் ஒத்துக்க ஒரு சடங்கு நடக்க ணும்.'' என்றள் கெஞ்சலாக.

''என்னைப் பொருத்தவரை அது அனுவஸ் யம் ஜெய். நான் எப்பவும் உங்களுடைய வள்னு சொல்றயே அதை நிரூபி. நீ டபாய்க் கறதைப் பார்த்தா நீ சொல்றது பொய். என்னை நீ காதலிக்கவே யில்லே. காதலிக் கிறதா நடிக்கிறே.''

''மது...''

''உஷ்... நடிக்காதே.''

''என் நெஞ்சை எப்படித் திறந்து காட்டறது? டோண்ட் யூ பிலீவ் மீ மது?''

''நம்பற மாதிரி நீ நடந்துக்கல்ல ஜெய். என் மேலே ஆசைப்படறவளா இருந்தா என் ஆசைக்கு நீ உடன்படுவே. அதுதான் உனது லட்சியமா. குறிக்கோளா இருக்கும். மிட்டாயைக் காட்டி ஏய்க்கிற குழந்தை மாதிரி ஆட்டி வைக்கிறே என்னை'' என்று பொரிந்தான் மது.

அடுத்தடுத்து அவள் போன் செய்த பொழுது அவன் பதில்கள் மாறவே இல்லே. 'ஐ நீட் யூ ஜெய்' என்றன்.

'ரெண்டு மனசு ஒத்துப் போறதுலே தப்பு இல்லே.' என்றான்.

''என் வழிக்கு வரலே... என்னை மறந்துடு'' என்றான்.

இதையெல்லாம் நினைத்து நினைத்து ஜெயா தன் சுபாவத்துக்கு மாறாக வீட்டில் இருந்தாள்.

''என்னடி ஜெயி, என்ன வந்தது உனக்கு?''

''ப்ச... ஒண்ணுமில்லே.''

''ஆபீஸ்ல ஏதாவது தகராறு?''

''ஒண்ணுமில்லேன்னு என்னைத் தனியா விடேன்.''

''சரி, தொலே. ஏதோ அரியர்ஸ் வந்தா எனக்கு பாலிஸ்டர் வாங்கித்தரேன்னு சொன்னியே? எப்ப வாங்கித் தரே?''




காதல் வயப்பட்ட பிரேமாவின் மனசு இப்போதெல்லாம் அலங்காரத்தில் நாட்டம் கொண்டது. ஜெயா வாங்கி வைத்துள்ள காம்பெக்டை — ஆனந்தைச் சந்திக்கப் போகும்பொழுது போட்டுக் கொண்டாள்.

மதுரத்திற்கு ஆண்குழந்தை பிறந்தது. மதுரத்தின் அம்மா உதவிக்கு வந்தாள். அது பிரேமாவுக்குச் சிறிது வசதியாக இருந்தது இன்ஸ்டிடியூட் போவதாகச் சொல்லிச் சென்றாள்.

''ஜெயா, கொஞ்சம் புதுசான புடவையா தாடீ. வெளியே போனா வெட்கமா இருக்கு. என் புடவைகள் ரொம்பப் பழசாப் போச்சு'' என்று ஜெயாவிடம் புடவைகளை வாங்கிக் கொண்டாள்.

சில சமயங்களில் ஜெயா தனக்குள் பரிதாபப்படுவாள். ஆசைகளை அடக்கிக் கொண்டு பிரேமா எப்படி இப்படிச் செக்கு மாடாக உழைக்கிறாள்? ஹோட்டலில் நல்ல பண்டங்களைச் சாப்பிடும்போது பிரேமாவுக்கு வாங்கிக் கொண்டு போக மனசு துடிக்கும். வீட்டுக்குக் கொண்டு போனால் பிரேமாவுக்குத் துளிகூடக் கிடைக்காது. இந்தப் பரிதாபத்தின் அடிப்படையில்தான் அவள் ஒரு பாலியஸ்டர் புடவை வாங்கித் தருவதாகச் சொல்லி இருந்தாள்.

அதை இப்பொழுது பிரேமா மறக்காமல் கேட்டாள். ''என்னை சித்த நிம்மதியா இருக்க விட மாட்டேளா? உழைச்சு உழைச்சு உங்க எழவைத்தானே எடுக்கறேன்'' என்று கத்தினாள் ஜெயா.

தன்னுடைய ஆனந்தத்தையும் அழுகையையும் தனியாகக் கொண்டாட தனி அறை ஒன்று தேவைப்பட்டது. உள்ளறை ஒன்றுதான் பொதுவானது. சின்னக் கூடம், உள்ளறை, சமையல் அறை, கம்பியிட்ட தாழ்வாரத்தைக் கொண்ட வீடு அது. உள்ளறை நொடித்த பெஞ்சில்தான் அவள் தன் சாம்ராஜ்யத்தை வைத்துக் கொள்வாள்.

மதுவை இழந்துவிடுவேனோ? என்ற பயம் நெஞ்சைக் குடைய, பெஞ்சில் குப்புறப் படுத்துக் கொண்டாள்.

''இதென்னடி, வெளக்கு வச்ச நேரத்தில் இந்தப் பெண் இப்படிக் குப்புறக் கெடக்கு. அப்புறம் எப்படி லட்சுமி தேவி இந்த வீட்டுக்கு வருவா?'' என்று மதுரத்தின் தாயார் புலம்பி விட்டாள்.

''நீ சும்மா இரு. அதுகிட்ட வாயைக் கொடுக்காதே'' என்ற மதுரத்தின் அடக்கமும், தாயாரின் முணு முணுப்பும் ஜெயாவுக்குக் கேட்டது.

மதுரத்தின் பிரசவத்துக்கு லோன் போட்டு ஐந்நூறு ரூபாய் கொடுத்தது உறுத்தியது. சும்மா வாயை மூடிக் கொண்டு இருக்க முடியவில்லை.

''இந்த வீட்டுக்கு லட்சுமி தேவியைக் கொண்டு வரதே நான்தான் பாட்டி. சித்த வாயை மூடிண்டு சும்மா இரு. வெளியே போய் ஆபீஸ்ல வேலே செஞ்சுட்டு வந்தாத் தெரியும்.'' என்று பதில் சொன்னாள்.

ஏதோ பதிலைச் சொல்ல முயன்ற தாயாரை சாடை காட்டி அடக்கினான் மதுரம்.

''பிரேமா எங்கே காணோம்? அது சமத்து. சொன்னக் காரியம் பண்றது'' என்றாள் மதுரத்தின் தாயார் சும்மா இருக்க முடியாமல்.

''அவ டைப் அடிக்கப் போயிருக்கா. இங்கே கல்யாணம் பண்றதுக்கு வழியைக் காணோம். எப்படியாவது ஒரு வேலே கெடைக்காதான்னு பிரேமா பார்க்கறு'' என்ற மதுரத்தின் குரலையும் மீறி—

''பிரேமா சமர்த்துத்தான். நான் அசடா இருந்துட்டுப் போறேன்'' என்று கத்தினாள் ஜெயா.

ஏற்கனவே மதுவின் போக்கால் மனத்தில் ஏற்பட்ட எரிச்சல் இப்பொழுது ஆத்திரமாகக் கொட்ட ஒரு வடிகால் ஆகியது.

''இப்ப நான் என்ன சொல்லிட்டேன்னு நீ இப்படிக் கத்தறேடி ஜெயா?'' என்று பாட்டி ஆரம்பித்தாள்.

''ஆமாம்; நான் கத்துவேன். பிடாரிதான் இன்னும் என்ன சொல்லணுமோ சொல்லிடு'' என்ற ஜெயா பொறுக்க முடியாமல் அழுதாள்.

அவளது அழுகையைக் கண்டதும் வீடு கம்மென்று அடங்கியது. மூலையில் நெருப்புப் பெட்டியின் மேல் உள்ள படத்திற்குச் சண்டை போட்டுக் கொண்டிருந்த குழந்தைகள் இரண்டும் கப்சிப்பென்று உட்கார்ந்து கொண்டன.

**''ஸ்...**..ப்ரேம்....''

காப்பிப் பொடி டப்பாவை எடுத்துக் கொண்டு திரும்பிய பிரேமா குரல் கேட்டு நின்றாள். ஆனந்த் அருகில் வந்தான்.

''என்ன ஆனந்த்?''

''நாளைக்கு சினிமா போகலாமா?''

உறுத்துப் பார்த்தாள் அவனை.

''என்ன சினிமா?''

''தூங்காத கண்ணின்று ஒன்று.''

''தூங்காம ரெண்டு கண்ணு இருக்குன்னு முதல்ல தெரிஞ்சுக்குங்க.''

அவன் அரும்பு மீசை விரியச் சிரித்தான்.

''உங்க சிரிப்பு நன்னா இருக்கு.''

''சிரிப்பு மட்டும்தானா?''

அவள் பதில் சொல்லாமல் வெட்கப் பட்டுக் கொண்டாள். ''வரயா?''

''ஊஹூம்.''

''என் பிரேம்?''

''வீட்டை விட்டுட்டு அடிக்கடி இப்படியெல்லாம் வர முடியாது ஆனந்த்.''

ஒரு கணம் அவன் முகத்தில் வேதனை பரவியது. ''எனக்கும் ஒரு வேலை இருந்ததுன்னு எதையும் லட்சியம் பண்ண மாட்டேன். உன்னைக் கல்யாணம் பண்ணிக்கிறேன்னு சொல்ல முடியாத நிலை.''

''முடிஞ்ச வரை காத்துண்டு இருப்பேன் ஆனந்த். ஆனா என்னைக் கன்னியாகுமரியா நிக்க வச்சுடாதீங்க. சிரிப்பு மட்டும்தானா பிடிச்சதுன்னு கேட்டீங்க இல்லே; முதல்ல உங்க பார்வைக்கு அடிமையானேன். அப்புறம் உங்க பாட்டுக்கு அடிமை; இப்ப உங்களுக்கு அடிமை.''

இதெல்லாம் நிலைக்குமா என்ற வேதனை நெஞ்சைக் கிள்ள, பேச்சு மேலே வராமல் வேகமாக நடந்தான் அவன். அவனுடைய பேச்சில் ஒன்று மட்டும் நன்றாகப் புரிந்தது. அவனுக்கும் தனக்கும் சீக்கிரம் கல்யாணம் நடக்காது என்று.

தெரு முனை வந்ததும் அவள் தன் அப்பா வருவதைப் பார்த்தாள். நிகுநிகுவென்று வலது கை பையைச் சுமந்து கொண்டு அவள் வருவதைப் பார்த்தார். பெருமூச்சு நெஞ்சைப் பிளந்தது. அவள் தன்னருகில் வரும்வரை நின்றார்.

''கடைக்குப் போயிட்டு வரயாம்மா''

கோடை கால வேர்க்குரு கட்டிகளால் அவதிப்படுகிறீர்களா... தெருவில் விற்கும் நுங்கு வாங்கி அதன் நீரைக் கட்டிகளின் மீது தடவினால் அப்படியே தணிந்துவிடும்..!

-ராஜேஸ்வரி

நன்றி: சித்தமருத்துவம்



''காப்பிப் பொடி அரைச்சுண்டு வரேம்பா.

''இருட்டப் போறது. முன்னாடியே போறதுக்கு என்னம்மா?''

''கரண்ட் இப்பத்தான் வந்தது.'' பேசிக் கொண்டே நடந்தாள். அவர்களைத் தாண்டிக் கொண்டு ஆனந்த் போறான். தங்கவேலுவைப் பார்த்து ஒரு 'ஹலோ' சொன்னான்.

''நல்ல பையன்'' என்று சர்ட்டிபிகேட் கொடுத்தார் தங்கவேலு.

பிரேமாவுக்குத் திருப்தியாக இருந்தாலும் ஏதாவது சொல்லித் தன்னை வெளிக் காட்டி விடுவோமோ என்ற பயத்தில் பேசாமல் இருந்தாள். வீட்டை அடைய இன்னும் சிறிது தூரம் இருந்தது. தெரு விளக்குகள் ஒளிரத் தொடங்கின.

''பிரேம்.''

''என்னப்பா.''

''உங்கிட்டக் கொஞ்சம் பேசணும்.''

''என்னப்பா? சொல்லுங்க.''

கண்களில் பரிவு வழியப் பார்த்தார்.

''வீட்ல பேச முடியாது. உங்க சித்தி உருப்படியா ஒண்ணையும் செய்ய மாட்டா. அதை விட அவ அம்மா... அடுத்தது ஜெயா... நீ மட்டும் பொறுமையா இல்லாட்டா எனக்கு வீட்டுக்கு வரவே பிடிக்காது பிரேமா.''

என்ன சொல்லுவதற்கு இந்தப் பீடிகை என்பது புரியாமல் நின்றாள் பிரேமா.

''செல்லுங்கப்பா.''

''சொல்லத்தாம்மா போறேன். உனக்கு கல்யாண வயசு. உனக்கு சின்னவ ஜெயா. சம்பாதிக்கிறே. நீ ஒரு பையனா பிறந்திருந்தா கல்யாணத்தைப் பத்திக் கவலைப்பட மாட்டேன். பொண்ணாப் பிறந்துட்டே.''

''உங்களுக்குச் சுமையாயிட்டேன்.''

''சீச்சி, கொடிக்குக் காய் பாரமா பிரேம்''

''சரி, சொல்லுங்கப்பா சீக்கிரம். வீட்லே வேலை இருக்கு. ஜெயா வந்திருப்பா. கொஞ்ச நாளா அவ போக்குச் சரியா இல்லே''

''அது கிடக்கட்டும்; அவ என்னிக்குச் சரியா இருந்தா? உனக்குக் கல்யாணம் பண்ணிடலாம்னு இருக்கேன்.''

அது எவ்வளவு தூரம் தன் பெண்ணைத் தாக்கும் என்பது அவருக்குத் தெரியுமா?

''அப்பா...அப்பா... என்னப்பா?''

''ஆமாம்மா, உனக்குக் கல்யாணம்பண்ண வேண்டாமா?''

அவள் சிலையாக நின்றாள். 'ஆனந்த்! உங்களுக்கு நான் இல்லையா?'

''இது நல்ல நியூஸ்னு எனக்குத் தெரியும். இனிமேதான் நான் சொல்லப்போறதை




நீ நன்னு யோசனை பண்ணணும், என்ன? பையன் எங்க பள்ளிக்கூடம்தான். என்னை மாதிரி ஆரம்பப் பள்ளி ஆசிரியன் இல்லை. ஹையர் செகண்டரிக்கு டீச்சர். ஆனா அவனுக்கு இது முதல் கல்யாணம் இல்லை.''

அவள் மூச்சு விடவும் மறந்தாள். ஒவ்வொரு 'லப்' 'டப்'பும் ஆனந்த் ஆனந்த் என்றது. இது யாருக்காவது புரியுமா?

''பாக்கச் சின்னப் பையன்தான். வயசும் ரொம்ப ஆயிடல்லே. மூத்தாளுக்கு மூணு குழந்தைங்க'' என்றார் தங்கவேலு.

மகளிடம் ரொம்பப் டக்குவமாக விஷயத்தைச் சொல்லி விட்டதாக — பளு இறங்கிய மனத்தினராக ஆனார் தங்கவேலு.

''எனக்கொண்ணும் கல்யாணம்வேண்டாம். இப்படியே இருந்துட்டுப் போறேன்'' என்ற பிரேமா விருட்டென்று நடந்தாள்.

தங்கவேலு சற்றுத் திகைத்தார். மகள் இப்படிப் பதில் சொல்லுபவள் இல்லையே? அதையும் தவிர இப்படி விருட்டென்று போகிறவளும் அல்ல. தான் சொன்ன விஷயம் அவளைப் பாதித்திருப்பதாக அவர் நினைத்தார். எந்த விதத்தில் என்று அவருக்குப் புரிந்திருக்க நியாயம் இல்லை. இரண்டாம் தாரமாக என்றதில் மகள் அதிர்ந்துபோயிருக்க வேண்டும். — நினைக்கவே மனத்தில் சங்கடம் தோன்றியது.

இருந்தாலும் விட்டுவிடுவதாக இல்லை. மெல்ல மகளைச் சம்மதிக்க வைக்கலாம் என்ற நம்பிக்கை இருந்தது. வேறு எந்தப் பையன் ஒரு பைசா செலவு இல்லாமல் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகிறான்? மகளிடம் சொல்லியாகி விட்டது. இனிமேல் வீட்டில் விஷயத்தைப் போட்டு உடைக்கக் கிளம்பினார். சமையல் அறையில் பையை வைத்த பிரேமா துக்கம் தாளாமல் குளியலறைக்குள் சென்று கதவைச் சாத்திக் கொண்டாள்.

ஆனந்த் இல்லாத எதிர்காலம் சூனியமாகத் தெரிய — கண்ணீர் விட்டாள்.

**ஜெ**யா சீக்கிரமே அலுவலகம் வந்து விட்டாள். மது கோபித்துக் கொண்டு ஸ்கூட்டர் லிப்ட் தருவதில்லை. சில தினங்களாக பஸ்ஸில் வந்து பழகிக்கொண்டு விட்டாள். மனத்தில் மட்டும் ஸ்கூட்டர் பவனி கனமாக உட்கார்ந்து அவஸ்தையைக் கொடுத்தது. அவன் தோளைப் பற்றிய கரம் அவனின் முணு முணுப்பான பேச்சுக்கள் இரட்டை அர்த்தங்கள் — எல்லாமே அவளை அலைக்கழித்தன.

போன் ஒலித்தால், 'இன்றாவது மது பேச மாட்டானா' என்று எதிர்பார்த்தாள். தொடர்ந்த ஏமாற்றங்கள்... மது இல்லாமல் என்னால் வாழ முடியாதோ? எனக்கு மது தான் வேண்டும். மது, நான் உங்களிடம் தோற்று விட்டேன். கையில் எடுத்த பைலில் மனம் பதியவில்லை.

''வாட் ஹேப்பண்ட் ஜெயா? பேயறைஞ்ச மாதிரி இருக்கீங்க?'' என்று மேலதிகாரி கேட்டார்.

''ஒண்ணுமில்லே சார்.''

''குடும்பத்திலே எதாவது தகராறு? வேணா லீவு எடுத்துக்கிறீங்களா?''

''ஐயையோ... வேண்டாம்... வேண்டாம் ஐ'ம் ஆல்ரைட்'' என்று மறுத்தாள்.

சின்னப் புறாக் கூண்டு போன்ற பெட்டி அறையும், குழந்தைகளின் அழுகையும், சித்தியின் உறுமலும், சீச்சீ... வீட்டில் ஒரு மனுஷன் நிம்மதியா சற்று அக்கடான்னு உட்காரவா முடியும்?

பேப்பர்களை மேஜை மீது பரத்திக் கொண்டு கவனத்தைப் பதிய வைத்தாள். ஒவ்வொரு எழுத்திலும் மது...மது... என்று குதித்தது. எழுந்து பாத்ரூம் போனாள்.

கண்ணாடியில் முகத்தைத் திருத்தினாள். நோ...நோ...மனம் அடங்கமறுத்தது. காபி குடிக்கக் கான்டீனுக்குப் போனாள். என்ன செய்தாலும் எங்கு நின்றாலும் மதுவா?

அவளை இறக்கி விட்டு திட்டு தினமும் இங்கு காப்பி குடித்து விட்டுத்தான் போவான். அறைக்கு வந்ததும் மதுவுக்கு போன் செய்து விடுவது என்று தீர்மானித் தாள். மனம் கொஞ்சம் அடங்கியது. அவன் அலுவலக நம்பரைச் சுழற்றினுள்.

புதுக் குரல்—

''மது இல்லே?''

''நீங்க யார் பேசறது?''

''அவருக்குச் சொந்தக்காரி. அவர் இல்லே?

''சொந்தக்காரின்னு சொல்றே, என்ன நடந்ததுன்னு தெரியாதா?''

''நான் ஊருக்குப் போயிருந்தேன். என்ன ஸார்... என்ன நடந்தது?'' பொய் சரளமாக வந்தது.

''நாலைஞ்சு நாள் முன்னுடி ஸ்கூட்டர்லே போறப்ப ஓர் ஆக்ஸிடெண்ட்...''

முடிக்க விடவில்லை ஜெயா. ''என்னுச்சு? எந்த ஆஸ்பத்திரி ஸார்?''

''காட் இஸ் கிரேட் மேடம். லாரியோட வலது பக்கம் இடிச்ச இடியிலே மதுவைத் தூக்கி எறிஞ்சு ரொம்ப நேரம் மயக்கமாக் கெடந்தான். ரெண்டு நாள்தான் ஆஸ் பத்திரியிலே இருந்திருக்கான். இப்ப ஆல் ரைட்.. ஒரு வாரம் கம்ப்ளீட் ரெஸ்ட் எடுத் துக்கணும்னு ரூம்லேயே வச்சிருக்கோம்.''

''ஓ...தாங்க் யூ ஸார்.''

போன் இணைப்பைத் துண்டித்ததும் நெஞ்சில் ஒரு பரபரப்புத் தோன்றியது. ஏதா வது ஆகியிருந்தால்? மது, உங்களை உடனே பார்க்கணும். ஏன் எனக்குச் சொல்லி அனுப்பலேன்னு சண்டை போடணும்.... மேலதிகாரியிடம் சொல்லிவிட்டு உடனே கிளம்பி விட்டாள்.

மது விபத்திலிருந்து தப்பி விட்டான். ஆனல் உனக்கு ஒரு விபத்துக் காத்துக் கொண்டிருக்கிறது என்று சொல்வது போல் பஸ் வந்து நின்றது. அவள் விபத்தை நோக் கிப் போய்க் கொண்டிருந்தாள்.

**வா**சற் காம்பவுண்டைத் தாண்டி தெரு வில் இறங்கினன் ஆனந்த்.

''அங்கிள்... அங்கிள்...''

ஓடிவந்தான் பிரேமாவின் தம்பி.

''என்னடா?''

அருகில் வந்தவன் சுற்றும் முற்றும் பார்த் தான். 'யாரும் பார்க்காதப்ப கொடு'னு பிரேமா கூறினதை நன்ருகக் குழந்தைக்கு ஞாபகத்தில் இருந்தது.

''இதை அக்கா கொடுக்கச் சொன்னு'' அழுக்குப் பேப்பர் மடிப்பைக் கொடுத்து விட்டு ஓடினன் பிரேமாவின் தம்பி.

தன்னை எங்கேயாவது சந்திக்கச் சொல்லி இருக்கிருளா? பிரேமாவின் மலர் முகத் தைப் பார்த்து ஒருசில தினங்கள் ஆகி விட்டன. அம்மாவைப் பெற்ற பாட்டி வீட்டில் ஒரு கல்யாணம் என்று தங்கவேலு

ஓமத்தை நன்ருகக் கல் நீக்கி புளித்த மோரில் முன் இரவே ஊற வைத்து காலை யில் நிழலில் சிறிது நேரம் உலர்த்த வேண்டும். பின் வாணலியில் ஓமத் தை நன்ருகப் பொரித்து பழைய வெல் லம் சிறிதளவு வைத்து அம்மியில் தண் ணீர் படாமல் பொடி செய்து கொள்ள வேண்டும். இப்பொடியுடன் சிறிதளவு நெய், தேன் சேர்த்து காலையில் சுண் டைக்காய் அளவு கொடுத்தால் குழந் தைகள் நல்ல பசி எடுத்து சாப்பிடு வார்கள். கோரு

பிரேமாவை அழைத்துக் கொண்டு போகக் காரணம் இருந்தது.

இரண்டாம் தாரமாகத் தான் கொடுக்கப் போகும் வரனுக்கு பாட்டி வீட்டாரை விட்டுச் சம்மதிக்கச் செய்ய நினைத்தார் தங்க வேலு. அதனுல்தான் பிரேமாவை அழைத் துச் சென்ருர். தங்கவேலுவின் நிலைமை புரிந்த மாமியார் வீட்டினர் பிரேமாவை தனியே அழைத்து வேப்பிலை அடித்தனர். பதில் சொல்ல முடியாமல் தவித்தாள்.

''அப்பாவுக்கு வசதி இல்லே பிரேமா. இங்கே மாமன், பாட்டி கிட்டயும் வசதி கிடையாது. காலம் கெடக்கிற கெடப்பில ரெண்டு வேளை சாப்பிட்டாப் போதும்னு இருக்கு. அப்பா சொல்றபடி நடந்துக்க. நாங்க உனக்குக் கெட்டது செய்ய மாட் டோம்'' என்ருள் பாட்டி.

பேத்திக்கு புதுப் புடவை, ரவிக்கை என்று எடுத்துக் கொடுத்து, தன் மகளையே பார்ப் பது போல உணர்ச்சி வசப்பட்டு அழுது விட்டாள் அந்த வயதான தாய். அந்தக் கணத்தில் இறந்துபோன தன் தாயை நினைத்து பிரேமாவுக்கு அழுகை வந்தது. என்ன மறுத்தாலும் அப்பா இந்த வரனை முடித்து விடுவார் என்ற பயமும் இருந்தது.

ஊருக்குத் திரும்பி இரண்டு தினங்க ளாகியும் ஆனந்தனைப் பார்க்க முடியவில்லை. அவன் திருச்சிக்கு ஓர் இன்டர்வியூ விஷய மாகப் போயிருந்தான். போனதுமே பலன் இல்லை. வந்தது வீண் என்று தெரிந்துவிட்டது பிரேமாவின் கடிதம் புத்துணர்வைத் தரும் மருந்தாக எண்ணிப் பிரித்தான். அவன் உயிர்க் குலையையே பிடித்தது.

அன்பு ஆனந்த் டியர்,

என்னை இரண்டாம் தாரமாக ஒருத்தருக்குக் கொடுக்க ஏற்பாடு நடக்கிறது. என்னைச் சீக்கிரம் உங்களுடையவளாக ஆக்குங்கள். எங்கு சந்திக்கலாம் என்று பதில் எழுதுங்கள்.

உங்கள் பிரேமி

அவன் சிலையாகிப் போனான்.

தங்கவேலு நடுப்பகல் உணவை முடித்துக்கொண்டு வாசல் தாழ்வாரத்தில் தாம்பூலம் போட்டுக் கொண்டிருந்தார். என்னவோ அசதியாக இருந்ததால் பள்ளிக்கூடம் போகவில்லை. துண்டை விரித்துப் போட்டுப் படுக்கத் தயாரானார். மதுரமும் வாசற்படியில் தலையை உலரப் போட்டுப் படுத்துக் கிடந்தாள். உள் பக்கம் ஒருபுறம் மதுரத்தின் தாயார்.



உள்ளறை பெஞ்சில் உட்கார்ந்தாள் பிரேமா. பழைய புத்தகத்துக் கோலம் ஒன்றை பேப்பர் ஒன்றில் போட்டாள். ஆனந்த் கடிதத்தைப் படித்திருப்பானு? என்ன எழுதியிருப்பான்? கல்யாணம் நடக்குமா? புள்ளிகள் பிசகி கோடுகள் சரியாக வரவில்லை. புத்தகத்தை மூடினாள்.

''அக்கா ஆனந்த் மாமா உனக்கு லெட்டர் கொடுத்திருக்....''

படி தடுக்கித் தடாலென்று விழுந்த பிரேமாவின் தம்பி அலறினான். கைக் கடிதம் தவறி தங்கவேலுவின் அருகில் விழுந்தது. அவர் அதையும் பார்க்கவில்லை. குழந்தையைப் பாய்ந்து எடுத்தார். நல்ல காலம்! முழங்கால் சிராய்ப்புடன் நின்றது.

''பார்த்து வரக்கூடாது... படவா...'' என்று அவர் கையை ஓங்கினார்.

''ஏற்கனவே கீழே விழுந்திருக்கு. நீங்க வேற அடிக்காதீங்க. கீழே யிருந்து மண்ணை எடுத்துத் துளி நெற்றியில் இடுங்க'' என்றாள் மதுரம் எழுந்து உட்கார்ந்தவாறு.

கையில் கடிதம் இல்லாததை உணர்ந்த அவன் ''லெட்டர் எங்கே?'' என்று கேட்டு விட்டுத் திருதிருவென்று விழித்தான்.

''என்னடா லெட்டர்?'' தங்கவேலு அதட்டினார்.

'ஒருத்தரும் பார்க்காதபடி கொடு பிரேமா கிட்டே' என்று ஆனந்த் சொல்லாதது குற்றம். குழந்தை உளறினான்.

''ஆனந்த் அங்கிள் பிரேமா அக்கா கிட்டே தரச் சொல்லி லெட்டர் கொடுத்தாரு.''

தங்கவேலு விழிப்பதைக் கண்ட குழந்தை ஓவென்று அழுதான். இதற்குள் தங்கவேலு படுக்கப் போட்ட துண்டருகில் கிடக்கும் துண்டுக் கடிதத்தை மதுரம் பார்த்து விட்டாள்.

''துண்டு கிட்டக் கிடக்கு. பாருங்கோ.''

தங்கவேலு பாய்ந்து கடிதத்தை எடுத்தார் பிரேமா குழந்தையின் அழுகுரல் கேட்டு, எழுந்து வந்தாள். அப்பா எதுக்காகக் குழந்தையை அடிக்கிறார்? நிலைப்படி அருகில் வந்து நின்றாள். தங்கவேலு கடிதத்தைப் படித்தார். ஒரே எட்டு... பாய்ந்து வந்து.... மதுரத்தின் காலை மிதித்துக் கொண்டு வந்து பிரேமாவின் தலை முடியைப் பற்றிக் கொண்டார்.

''எத்தனை நாளா இப்படி ஒரு நாடகம் நடத்தறே? அப்பன் கல்யாணம் பண்ண மாட்டான்னு நினைச்சு நீயே புருஷனைத் தேடிக்கிறியா? ஏண்டி நாயே...''

மட்டுநு நிலைப்படியில் முட்டினார். பிரேமா அலறினாள்.

''ஐயோ... என்னன்னு எழுதி இருக்கு. அவளைக் கொன்னுடாதீங்கோ. எனக்குக் கெட்ட பெயர் வந்துடும்.'' என்று எழுந்து வந்து தடுத்த மதுரத்தைப் பிடித்துத் தள்ளினார்.

''இன்னிக்கு ரெண்டுலே ஒண்ணு தீர்த்துட்டுத்தான் மறுவேலை பார்க்கறது. ஓடிப் போயிடலாம்னு எழுதி இருக்காளே டீ... ஓடியா போறப்பறே?'' பின்னலைப் பிடித்து உலுக்கினார்.

காலை மடக்கி உதைத்தார்.

''ஐயோ வேண்டாம்னு..பொண்குழந்தை படாத இடத்துலே பட்டுடப் போறது'' என்று மதுரம் அலறினாள்.

சுருண்டு விழுந்த பிரேமாவை தூக்கினார். உதட்டில் ரத்தம் சொட்டியது. அக்கம் பக்கத்து ஜன்னல் தலைகளை அவர் லட்சியம் பண்ணவில்லை.

''வாடி இங்கே.''

தரதரவென்று பிடித்து இழுத்துக்கொண்டு போய் ஒரு தள்ளுத் தள்ளினார். சும்மா சாத்தியிருந்த கதவைத் தள்ளிக் கொண்டு தடாலென்று விழுந்தாள் பிரேமா. சுவரோரம் படுத்திருந்த ஆனந்தின் அப்பா

பயந்து எழுந்து விட்டார். என்ன நடந்தது என்றே புரியவில்லை.

''என்னய்யா, என்ன இது?'' என்று நழுவிய வேட்டியை இழுத்துக் கட்டிக் கொண்டே கேட்டார்.

''நான்னா கேட்கணும். எங்கேய்யா உம்ம பிள்ளை?''

''ஆபீஸ் போயிருக்கான்.''

''பெரியவனைக் கேட்கல்லே. ஒரு தத்தாரிய சின்னப் பிள்ளையாப் பெத்து விட்டிருக்கிறீரே? அவனைக் கேட்கிறேன்.''

நடுக்கத்துடன் கூடத்தில் நின்ற ஆனந்த் எட்டிப் பார்த்தான். எழுந்த தங்கவேலு அவனை இழுத்துக் கொண்டு வந்தார். கையில் கருட்டிக்கொண்டு உருண்டையாகக் கிடந்த கடிதத்தை எடுத்து வீசினார்.

''பாருய்யா உம்ம பிள்ளை யோக்கியதையை...'' என்று ஏக வசனத்தில் ஆரம்பித்தார்.

நிதானமாகப் பார்த்தார் ஆனந்தின் தந்தை.

''என்னடா இதெல்லாம்'' என்று ஆனந்திடம் கேட்டார். ''உட்காருங்கோ ஸார்'' என்றார்.

முமுகவென்று நின்றார் தங்கவேலு. ஆனந்த் தலையைக் குனிந்து கொண்டான்.

''ஸார்! இவனுக்கு ஒரு தங்கையும் ஓர் அண்ணாவும் இருக்கா கல்யாணத்துக்கு.''

''அதுக்குள்ள உம்ம பையன் அவசரப் படறானே?''

''இதெல்லாம் நடக்கற காரியமா? டேய் ஆனந்த், உன் நிலைமை தெரியறதா? இவ கையைப் பிடிச்சு அழைச்சுண்டு வெளியே போறதானாப் போ. அடுத்த வேளை சோறு இங்கே கிடையாது. மாத்துத் துணி கூட எடுக்க விடமாட்டேன்.'' என்று மகனை மிரட்டினார்.

ஆனந்த் தலையை நிமிர்த்தவில்லை. ''வா பிரேம் போகலாம்'' என்று தன்னை அவன் அழைப்பான் என்று பிரேமா நினைத்தாள்.

''என்னடா... பேசாம இருந்தா எப்படி? லவ் லெட்டர் எழுதறபோது எப்படி இருந்தது? என்னோட பதிலும் இதுதான். மாத்து துணி கூட எடுக்க உள்ளே விட மாட்டேன்'' என்று கத்தினார் தங்கவேலு.

''என்டா, எத்தனை லெட்டர் எழுதினே?''

''இந்த ஒண்ணுதான்.''

ஆனந்தின் தந்தை சுருதி குறைத்துப் பேசினார்.

''வாழையிலே முள்ளு பட்டாலும் முள்ளுலே வாழை பட்டாலும் நஷ்டம் வாழைக்குத்தான். டேய், ஆனந்த், இப்படி வாடா...



ஸார் கிட்டே மன்னிப்புக் கேளு. பிரேமா வைத் தங்கையா நினைக்கிறேன்னு சொல்லு''

ஆனந்த் ஓரடி முன்னால் வந்தான்.

''சொல்லாதீங்கோ... உங்களைத்தான் நம்பியிருக்கேன். என்னாலே உங்களை அண்ணாவா நினைக்க முடியாது. ப்ளீஸ்'' சுவரில் தலையை முட்டிக்கொண்டு கதறினாள் பிரேமா.

நிலை சுற்றி வாந்தி வருகிறதே என்று ஜெயா வீட்டுக்குத் திரும்பினாள். ஆட்டோவில் வரும்பொழுதே பின்னலிட்ட கணக்குகள். விடை சரியாக வருகிறதே. ஓ... மதுவின் குழந்தைக்கு அவள் தாய். மனத்துக்குள் பதட்டம். வீட்டுக்கு வந்து பிரேமாவிடம் சொல்லி லேடி டாக்டரைப் பார்க்கலாமா?

**அவல் அப்பளம்:-**

சுத்தமான அவல் 1 கிலோ மிஷினில் அரைத்து வரவும். முக்கால் கிலோ மாவு எடுத்து உரலில் போட்டு கொஞ்சம் கொஞ்சமாக கொதி வெந்நீர் சேர்த்து இடிக்கவும். நல்ல மாவு பதம் வந்ததும் உப்பு பெருங்காயம் மிளகாய்த்தூள் சேர்த்து இடித்து பிசைந்து மீதி இருக்கும் அரை கிலோ மாவை மேல் மாவாக தொட்டுக் கொள்ள வைத்து அப்பளம் இடவும். நல்ல ருசியாக இருக்கும். வாயில் போட்டதும் கரையும். 1 கிலோவில் 60 அப்பளம் வரும்.

காரட்:— நன்றாக கிடைக்கும் இக்காலத்தில், சுத்தமாக காரட்டை அலம்பி கொப்பரை துருவியில் பூப்போல துருவி உப்பு சேர்த்து வெய்யிலில் உலர்த்தி பாட்டிலில் எடுத்து வையுங்கள். வேண்டிய போது வாணலியில் கடுகு, பச்சை மிளகாய் தாளித்து இதையும் போட்டுப் பொரித்து எடுங்கள். படு ஜோராக இருக்கும்.

—மீரா.

என்ன நடக்கிறது என்று புரியாமல் வாசல் படியிலேயே நின்றாள். இது மட்டுமா புரியவில்லை? மது வேறு ஊருக்கு ட்ரான்ஸ்பர் வாங்கிக் கொண்டு போவதும்தான் புரியவில்லை. இல்லை... தெரியவில்லை?

''சொல்லுடா. இனிமே இவளைத் திரும்பிப் பார்ப்பியா? இவ என் தங்கை மாதிரின்னு சொல்லு. அப்படித்தான் நினைக்கிறேன்னு சொல்லு'' பாய்ந்து கூடத்து ஸ்டாண்டில் தொங்கிய பெல்ட்டை எடுத்துக்கொண்டார் ஆனந்தின் அப்பா.

கையை யாசிப்பது போல் ஏந்தினாள் பிரேமா. ''சொல்லாதீங்கோ ஆனந்த் ப்ளீஸ்... உலகம் பெரிசு. எங்கேயாவது போய் வாழலாம்.''

''ம்... பெரிய லைலா-மஜ்னு... அடுத்த வேளை சோத்துக்குக் காசு கெடையாது. இடுப்பு வேட்டியை வித்துத்தான் திங்கணும். தெரியுமா? உலகம் பெரிசு. எங்களுக்குத் தெரியாது பார். சொல்லுடா முண்டம்.''

பெல்ட்டைச் சொடுக்கினார் ஆனந்தின் அப்பா.

''வேண்டாம்னு... சொல்லுடா. அடிபட்டுச் சாகாதே. அப்பாவோட கோபம் தெரியாதா? அண்ணாவும் தங்கையும் இருக்கறப்ப உனக்கு என்னடா அவசரம்? சொல்லுடா'' என்று குறுக்கே வந்து நின்றாள் ஆனந்தின் அம்மா.

'பளிச்'சென்று ஆனந்த் முன்னால் வந்தான்.

''ஸார், நான் இவளைத் தங்கையாத்தான் நினைக்கிறேன். இனிமேலும் நினைப்பேன். ப்ராமிஸா'' என்றான்.

ஆனந்தின் தந்தை பெல்ட்டை உட்புறம் வீசிப் போட்டார்.

'நேரம் கூடி வந்த வேளை — நீ
நெஞ்சை மூடி வைத்த கோழை'

—வானொலியில் பாட்டு எங்கிருந்தோ அலறியது.

''பார்த்தீர்களா ஸார். என் பையன் என்னோட பேச்சுக்குக் கட்டுப்பட்டான். அப்படி வளர்த்திருக்கேன். ஏதோ வயசுக் கோளாறு. உங்க பெண் இப்படி அப்படி நின்னுருக்கா... கண்டிச்சு வையுங்கோ'' என்றார்.

பற்களைக் கடித்தார் தங்கவேலு. என்ன பேச்சுப் பேசுகிறான் இந்த மனுஷன்? தன் பவுன் சரியில்லை என்றால் தட்டானைக் கட்டியா அடிக்க முடியும்?

''வாடி போகலாம்'' பிரேமாவின் கையை பிடித்து இழுத்தார்.

வெடுக்கென்று உதறினாள் பிரேமா. கண்களில் தீப்பொறி பறக்கப் பார்த்தாள். 'நெஞ்சை மூடிவைத்த கோழை' ''சீ... நீயெல்லாம் ஒரு மனுஷனாடா?'' என்று கேட்டவள், காரி உமிழ்ந்தாள்.

''வாங்கப்பா போகலாம்'' தந்தையைப் பின்தொடர்ந்தாள்.

''அப்பா, நீங்க சொன்ன வரனையே பார்த்து முடிச்சுடுங்கோ. காதலிச்சவனைத் தங்கைங்கற கயவனை விட ரெண்டு குழந்தைக்குத் தாயா இருக்கறது ரொம்பப் புண்ணியம். இவனைக் காதலிச்ச குற்றத்துக்காக இன்னும் ரெண்டு அடி அடியுங்கப்பா'' என்று தன் தோளில் குழந்தையாய் சாய்ந்து அழுத மகளைப் பரிவுடன் தட்டிக் கொடுத்தார் தங்கவேலு.

ஜெயாவுக்கு நடந்தது தெரிந்தால் அதையும் ஒரு விபத்து என்று ஏற்றுக் கொள்வாரா?

—இப்படிப்பட்ட குடும்பங்களில் விபத்துக்கள்தான் அதிகம். ஏனென்றால் இந்தக் குடும்பங்கள் குறுகலான சாலைகள்.

## 28

சின்னுவுக்கு அந்தப் பையன் பேசுவது, அவர்கள் பார்த்துக் கொண்டிருப்பது எல்லாமே சங்கடமாக இருந்தது. ''ஒருமுறை ஒருத்தரை ஒருத்தர் வெளித்தோற்றத்தைப் பார்த்துக்கிறதை வெச்சுண்டு ஒரு லைஃப் டைம் முடிவு பண்றது கொஞ்சம் அநியாயம் தான் இல்லே சின்னு'' என்றான்.

பதில் பேசவில்லை.

''அதேசமயம் ரெண்டு மூணு மாசம் நாம பழகிப் பேசிண்டாலும் ஒருத்தரை ஒருத்தர் பூராவும் தெரிஞ்சுப்போம்ங்கறதும் அபத்தம்தான்னு என் அபிப்பிராயம். நீங்க என்ன நினைக்கிறீங்க?''

சின்னு பேசவில்லை.

''ஏதாவது பேசேண்டி அவர் கேக்கறார்.''

''உங்கிட்டருந்து பதில் வரவரைக்கும் காத்துண்டுதான் இருக்கப்போறேன்! ராத்திரி எத்தனை நாழியானாலும் சரி.''

''சத்துரு! என்னடா இது அந்தப் பொண்ணு பாவம் வெக்கப் படறது.''

அப்பா 'உக்கும்' என்று கனைத்து ''சின்னு போம்மா உள்ள.. ஏதாவது அம்மாவுக்கு ஒத்தாசை செய்யணும்னு போய்ப்பாரு'' என்றதில் அவள் சட்டென்று எழுந்து கொள்ள,

''இருங்க என் கேள்விக்குப் பதில் சொல்லிட்டுப் போகட்டும்'' என்றான்.

சின்னு அவனை மறுதடவை பார்த்தாள். இவன்தான் என் கணவனு தெரியலில்லையே!

மது ''ஸார் அவ கொஞ்சம் டிமிட் டைப்பு'' என்றான்.

''சரிப்பா நான் கல்யாணம் செய்துக்கப் போற பொண்ணோட குரலைக் கேக்கக் கூட எனக்கு உரிமை இல்லையா?''

''சின்னு ஏதாவது பேசேன்'' என்றான் மது.

சின்னுவுக்கு நாக்குப் புரளவில்லை. என்ன பேசுவது எல்லாமே செயற்கையாக இருக்கையில்.

''ஏதாவது கேள்வி கேளுங்கோ, பதில் சொல்வா.''

''சரி டில்லி எங்க இருக்கு?'' என்றான்.

சின்னு பதில் சொல்லாமல் மதுவைப் பார்த்தாள்.

''ஜியாக்ரபி இல்லாம கேளுங்கோ.''

''சரி ரெண்டும் ரெண்டும் எத்தனை?''

''நாலு!'' என்றான்.

அப்பாடா என்று கைதட்டினான். எல்லாரும் சிரித்தார்கள். சின்னுவுக்கு அழுகை வந்தது. உள்ளே ஓடினாள். அம்மா ''என்னடிது கல்லூளி மங்கத்தனம்! ஒரு பொண்ணு வாயைத் திறந்து பேசமாட்டியோ?''

''போம்மா!'' என்றாள். ''எனக்கு ஒண்ணுமே பிடிக்கலே'' மது வந்து அவளைத் தலையில் தடவிக் கொடுத்ததும் அவளுக்கு கண்களில் நீர் வடிந்தது. ''கவலைப்படாதே சின்னு''.

''எல்லாரும் சேர்ந்து என்னைப் பரிகாசம் பண்றீங்க. போடா!'' என்றாள்.

''சேசே! பரிகாசம் இல்லே சின்னு. அடாடா இதுக்குப் போய் கண்ணில தண்ணியா? சரி நீ மாப்பிள்ளையை நாலும் நாலும் எத்தனைன்னு கேட்டுட வேண்டியதுதானே. ''ஸார், நாலும், நாலும் எத்தனைன்னு எங்கச் சின்னு கேக்கறா'' என்று இரைந்தான்.



# எப்போதும் பெண்

சுஜாதா

போடா! சின்னு மாப்பிள்ளையை இங்கிருந்து பார்த்தான். சமர்த்தாக அழுந்தி உட்கார்ந்து கொண்டு அப்பாவிடம், ''எல். டி. ஸியில ஃபர்ஸ்ட் க்ளாஸ் ஃபேர் கொடுத்துருவான்'' என்று பேசிக் கொண்டிருந்தான். அவர்கள் வீட்டு மனுஷர்கள் எல்லாம் சகஜமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். அப்பாபோல இருந்தவர் ''உங்க டி. வி. என்ன மாடல்'' என்றும் மாமா போல இருந்தவர் பால் விலை பற்றியும் அம்மாவிடம் அந்த அம்மா ''போன் பண்ணா உடனே கொண்டு போட்டுடுவான்''என்றும் பேசிக் கொண்டிருந்தார்கள். வைஜயந்தியை ஞாபகம் வந்தது. அவளாக இருந்தால் என்ன ஸார் ராமசந்திரன் என்னன்னு நினச்சுண்டு என்னை இந்தக்கேள்வி கேக்கிறேன்? ரெண்டும் ரெண்டும் உன் மண்டை! என்று சொல்லியிருப்பாள். ராமச்சந்திரனைப் பற்றி அவளுக்கு எதும் தோன்றவில்லை. பார்த்தால் ராங்கிக்காரன் போலவும் இல்லை. பல்வரிசை இங்கிருந்து கூட பளிச்சென்றது. சிரிக்கிறபோது கொஞ்சம் வரிசை தவறியிருந்தது அழகாக இருந்தது. நகத்தில் ஒருவிரலில் மட்டும் க்யூடெக்ஸ் போட்டிருந்ததைப் பார்த்தது சின்னுவுக்கு சிரிப்பு வந்தது.

''அப்ப ஜெம்பளமா சந்துரு.''

''இருப்பா அவாளை எதுக்கு சஸ்பென்ஸில வெக்கணும். முடிவு சொல்லிடலாமே?''

''இப்பவேவா?''

''எதுக்காக 'போய் எழுதறேன் இழுதறேன்'னு எல்லாம் இழுக்க அடிக்கணும்? நான் ரொம்ப ஸ்ட்ரெய்ட் ஃபார்வர்ட் மான்! அட்மின் சர்வீஸில் இந்த மாதிரி கத்திவெக்காம இருக்கிறது எனக்கு எப்பவுமே உதவறது. எனக்கு உங்க பொண்ணை பிடிச்சிருக்கு. இன்னும் கொஞ்சம் தைரியமா பேசியிருக்கலாம். பரவாயில்லை. கல்யாணம்



ஆனப்புறம் பேசப் போறோம்ங்கிற தில ஒரு எதிர்பார்ப்பும் இருக்கட்டும். முக்கியமா நாங்கள்ளாம் போனப்புறம் உங்க பொண்ணை என்னைப் பிடிச்சிருக்கான்னு கேட்டு அவ சம்மதம் சொன்னு அப்பாவுக்கு எழுதுங்கோ. ஜாதகம் எல்லாம் பார்க்க வேண்டாம். எல்லாம் சுத்த நான் சென்ஸ். ஒரு வாரத்துக்குள்ளே தகவல் சொல்லுங்கோ. கல்யாணத்தை ஜனவரில வெச்சுண்டா நல்லது. இல்லேன்னு டிட்ரெட் ஜெஷன் முடிஞ்சதும் எப்ரல் மேக்கு ஷிப்ட் பண்ணிக்க வேண்டி வரும். எல்லா விவரத்துக்கும் எழுதுங்கோ. போகலாமா? போகலாமாம்மா?பாத்தாச்சில்லே.''

அடடா! வயிற்றை என்னமோ செய்கிறதே ஒரு கோலி சோடா வாங்கி வாயேன்' என்று சொல்பவர்களுக்கு அதைவிட உயர்ந்த சோடா தயாரிக்கலாமே! ஒரு ஸ்பூன (காரு சோடா) சாப்பாட்டுச் சோடாவை அரை டம்ளர் ஜலத்தில் போடவும். எலுமிச்சம்பழ விதைகளை நீக்கிப் பிழியவும். தோலைக் கசக்காமல் லேசாகப் பிழியவும். காதை வைத்துக் கேளுங்கள் 'உஸ்' என்ற சப்தம் வரும். நுரைத்து வரும். அப்படியே குடியுங்கள். வயிற்று ஜீரண சக்தி அதிகரிக்கும். புளியேப்பத்தைக் கண்டிக்கும். வயிற்று உப்புசம் குறையும். நிச்சயம் கெடுதல் செய்யாத 'புதிய சோடா' ருசித்த அனுபவம் உங்களை கலகலப்பாக இருக்கச்செய்யும்.

—ரோஜா

நான் வரேன். என்ன பேரு? சின்னு! முழுப்பேரு கூட தெரிஞ்சுக்கக்கலை பாருங்கோ!''

அவர்கள் புறப்பட்டுப் போனதும் வீட்டில் உட்கார்ந்து கொண்டு, மகாநாடு நடத்தினார்கள்.

''நல்ல பையன்'' என்றார் அப்பா.

''என்னடி சொல்றே சின்னுக்குட்டியோ?''

மது ''சின்னு அவர் சொன்னப்பல உன் இஷ்டம் இல்லாம ஒரு காரியமும் நடக்காது.''

''அம்மா நான் படிக்கிறேம்மா, அப்புறம் கல்யாணம் பண்ணிக்கிறேம்மா.''

''ஏன்? ஏன்?''

''கல்யாணம்னு எனக்கு வந்து பயமா இருக்கும்மா.''

''ஏன் என்ன பயம்?''

''உங்களை எல்லாம் விட்டுட்டு போகணுமே என்று.'' 'அம்மாவின்பால் வந்து அவள் தோள்மேல் கைகோர்த்துக்கொண்டு செல்லமாக அவள் முகத்தில் முகத்தைத் தடவி ''எதுக்காகம்மா எல்லாரும் என்னைப் புடிச்சுப் புடிச்சுத் தள்றேள்? எனக்கு எப்படிம்மா உங்களை எல்லாம் விட்டுட்டு இருக்க முடியும்? எனக்கு ஒண்ணுமே தெரியாதும்மா! யாரோ ஒரு அன்னியனுக்கு அவன் சொன்னப்பல ஒரே ஒருதடவை பாத்துட்டு திடீர்னு என்னைக் கல்யாணம் பண்ணி அனுப்பணும்னு என்ன ஆத்திரம்? நான் இன்னும் கொஞ்ச நாள் நிம்மதியா இருக்கக் கூடாதா? என்ன மது?''

''எனக்கு ஒண்ணும் தெரியலேம்மா. ஆனா நீ சொல்றதில பாயின்ட் இருக்கு. அப்பா எதுக்கு இவளை அவசரப்பட்டு மூட்டைக்கட்டி அனுப்பணும்?''

''என்னடா சொல்றே? வயசு என்ன ஆச்சு தெரியுமா? என்னடி வயசு உனக்கு?''

''பத்தொன்பது.''

''அப்பா இட்ஸ் எ க்ரைம்பா!'' என்று சின்னுவின் தலையைத் தடவிக் கொடுத்தான். ''குழந்தை இது.''

''குழந்தையா?''

''நான் உங்களை எல்லாம் விட்டுட்டுப் போக மாட்டேன். மதுவுக்கு அப்புறம் யார் சட்டைபட்டன்லாம் தெச்சுப்போடுவா இல்லே மது?''

''விளையாடாதே. இத பாரு சின்னு. நீ படிச்சுக் கிழிச்ச ஒண்ணும் ஆகப்போறதில்லே.''

''வேலைக்குப் போறேன்.''

''என்னடிது? இப்படிப் பேசறே! நல்ல வரன் வலுவில வந்த கல்யாணம் பண்ணிக்கறேங்கறான். இது என்னமோ மோட்டு வளையைப் பார்க்கறதே.''

''நீங்க போங்கோ. நான் இதுங்கூட பேசி நைச்சியம் பண்ணி வைக்கறேன்.'' என்று அம்மா கண்ணைக்காட்டினாள்.

அதற்கப்புறம் சின்னுவை யாரும் கல்யாணத்தைப் பற்றி அபிப்பிராயம் கேட்கவில்லை. அம்மா கல்யாணம் நடக்கப் போவதை நிச்சயமாகக் கொண்டே அடுத்த வாரம் பூராவும் பேசினாள். ''டில்லில குளிர் ஜாஸ்தி இருக்குமாம். ஒரு குப்பங்குல்லிட்டும் போர்வையும் வாங்கிண்டுடணும் அங்கல்லாம் பாலு ரொம்ப மலிவாண்டி.''

'நாத்தனார்க்காரி போட்டுண்டிருந்தாப் பாரு எட்டுக் கல் பேஸரி!....

''அப்பா இட்ட படிக்கப் படிக்க சொல்லி யாச்சு. பி.எச்.டி லோன் அப்ளை பண்ணுங்கோ பண்ணுங்கோன்னு எல்லாவற்றையும்மௌனமாக கேட்டுக் கொண்டே இருந்தாள். கல்யாணம் வேண்டாம் என்று அடித்துக் கொள்ள வேண்டும் போல இருந்தாலும் சொல்லவில்லை. நிஜமான விருப்பம் என்ன என்பது புரியாத பேதையாக இருந்தாள். ஒருசமயம் பார்த்தால் தனக்குப் படித்து பாஸ் பண்ணி இன்டர்வியூவுக்குப் போய் வேலை கிடைத்து தினசரி பஸ்ஸில் போய் வருகிற திறமை இருக்கிறதாகத் தெரியவில்லை. தன்னுடைய பாத்திரம் தன்னை

ஆயிரக்கணக்கான குடும்பங்கள் காலங்காலமாக
பயன்பட்டுவரும் கிராம்புத் தைலத்தின்
நன்மைகளை ப்ராமிஸில் கண்டுணர்ந்தனர்.

# கிராம்புத் தைலம் கொண்ட இணையற்ற டூத்பேஸ்ட் ப்ராமிஸ்

நீங்களும் ஏன் அதை உபயோகிக்கக்கூடாது?






**ப்ராமிஸ்**

பற்சிதைவிலிருந்து பாதுகாக்கிறது,
வாய்க்குப் புத்துணர்ச்சி
தருகிறது மற்றும்
துர்நாற்றத்தை அகற்றுகிறது.




பல்ஸாரா தயாரிப்பு



ஆரோக்கியமான பற்கள்,
ஈறுகள் மற்றும் புத்துணர்ச்சிமிக்க
மூச்சுக்கு ப்ராமிஸ்.

அறியாமலேயே தனக்கு அமைவது போலத் தான் இருந்தது. கல்யாணம் விரும்பத் தக்கதாகவும் பயம் தருவதாகவும் இருந் தது. கல்யாணத்துடன் தவிர்க்க முடியாமல் அதனுல் ஏற்படப் போகும் விளைவு தன் காலத்துடன் உள்ள தொடர்பு. ஒரு சங்கிலி துண்டிக்கப்படப் போகிறது அப்பாவையும், அம்மாவையும், சகோதரர்களையும் வீட்டை யும், வீதியையும், நட்பையும் துறந்துவிட்டு அன்னியனுடன் செல்ல வேண்டும் என்பது நிஜமாக இருந்தது. கல்யாணத்தைத் தவிர வேறு ஏதும் தனக்கு இருப்ப தாகவும் தெளிவாக இல்லை. இது செய்து தான் ஆகவேண்டும். ஒரு மனைவி, ஒரு தாய்! இதுதான் எனக்கு உரிய வாழ்க்கை.

அதில் பாசம் இருக்கப் போவதைப் பற்றி எச்சரிக்கைகள் ஏதும் இல்லை. கணவன் என்று வாய்க்கப் போகிறவன் அவள் மனபிம்பக் கணவனின் ஒரு ஏமாற்றுப் பிரதிதான். அவளுடைய ஆதர்ச கணவன் அவன் அல்ல. அந்த ஆதர்சக் கணவன் ஒரு பொய்தான். கல்யாணம் ஒரு பொதுப்படையான அவசியமான கட்டம். இந்தக் கணவன் தான் என்ப இல்லை. ஒரு கணவனை அடைவது. இந்தக் குழந்தையைப் பெறுவது என்றில்லை! குழந்தை பெறுவது சமூகம் பெண்ணிடம் கேட்டு வாங்குகிற ஒரு விதமான பணி தான் அது! சொந்தமாக அவளுக்கென்று ஏதும் நிறைவேறப் போவதில்லை. மற்றவர் பணித்த காரியத்தை அல்லது இயற்கை அல்லது கடவுள் பணித்த கட்டாயக் காரி யத்தை அவள் செய்யப் போகிருள். செய்ய வேண்டும்! கல்யாணம் ஒரு புனித மான விஷயம். ஒரு கடமை! அதிலிருந்து சந்தோஷத்தை எதிர்பார்க்கக் கூடாது. சந் தோஷம் என்பது இரண்டாம் பட்சம்தான்.

டில்லிக்கு அந்தப் பையன் திரும்பிப் போய் விட்டானும். சின்னுவை ரொம்பப் பிடித்துப் போய் விட்டதாகவும் தினம் எஸ். டி. டி. போட்டு 'என்ன சொன்னுர்கள் என்ன சொன்னுர்கள்?' என்று கேட்டுக் கொண்டிருப்பதாகவும் மாம்பலத்திலிருந்து அவன் மாமா வந்து சொன்னுர். ஒருதடவை அப்பா சின்னு இருக்கிருளா என்று உள்ளே பார்த்துக் கொண்டே, ''எங்களுக்குச் சம்ம தம்னு சொல்லிடுங்கோ'' என்ருர்.

''கல்யாணத்தை எப்ப வெச்சுக்கலாம்?''

''தை மாசம் பொறந்ததும் வெச்சுண்டுட லாம். சத்திரத்துக்குக் கூட புக் பண்ணிட் டேன். மத்த வெளகேங்கள்ளாம் வெள்ளிக் கிழமை வந்தா பேசிடலாம்'' என்ருர்.

அப்பாவும், அம்மாவும் இதற்கு ஆயிரம் அதற்கு இரண்டாயிரம் என்று பேசிக் கொண்டிருப்பதிலிருந்து மறைமுகமாகச் சின்னுவுக்கு தன் கல்யாணம் ஊர்ஜித மாயிற்று. அப்பாமேல் கோபம் வந்தது. ஓசைப்படாமல் ஏற்பாடுகள் செய்து கொண்டு வந்திருக்கிருர். தன்னிடம் ஏன் சொல்லவில்லை என்று கேட்க வேண்டும் போல இருந்தது. கேட்கவில்லை.

சின்னு தனக்கு நிகழப்போவதை முழுமை யாக ஒப்புக் கொண்டு விட்டாள்.

(தொடரும்)

---

ரொட்டிசுட்டும் கவிதைகள் எழுதியுமே தமது வாழ்நாளில் பெரும் பகுதியை வீணுக்கி விட்டதாக உணர்ந்த நிலையில் சர்ச்சைக்குரிய பிரபல ஆங்கில புரட்சி எழுத்தாளரும் காதற்சுவை கவிஞரு மான கமலாதாஸ் இப்போது தீவிர அரசியலிலும் சமூக சேவையிலும் ஈடு பட முற்பட்டுள்ளார். வங்காளியை மணந்துள்ள கேரளியப் பெண்மணி யான இவர் கருத்துப்படி, கல்வி வாசனையற்ற ஊழல்வாதிகளிடம்இன்று அதிகாரம் குவிந்திருப்பதால், எங்கும் நயவஞ்சகம்: ஆடவர்கள் அனைத்தையும் பாழாக்கி விட்டனர்; இன்று மரங்கள் வெட்டப் படுகின்றன; நாளைத் தண் ணீர்ப் பஞ்சம்; அரிசிப் பற்ருக்குறை; மண் எண்ணெய் தட்டுப்பாடு, இவை யெல்லாம் பெண்களைப் பாதிக்கும் பிரச் சினைகள். இவற்றிற்காக உரிமைக் குரல் எழுப்பிப் போராடுவதற்காக மாதர் களுக்கென தனிமையான, முழுமை யானதொரு அரசியல் கட்சியைத்தாம் விரைவில் அமைக்கப் போவதாக இவர் அறிவித்துள்ளார்.

எஸ். ஏ. காதர்.



# இம்மாத இல்லத்தரசி

பரிசுகளை அளிப்போர்:

**எம். ஏ. எத்திராஜுலு நாயுடு**
எவர்சில்வர், அலுமினியம் பாத்திரம் வியாபாரம்
16, ஈவினிங் பஜார் சென்னை-600 003.
போன்: 32106

முதல் பரிசு: வசந்தா தூக்கு

## பேரிச்சம்பழ ஸ்பெஷல் வடகம்

**தேவையான பொருட்கள்:**

பேரிச்சம்பழம் (கொட்டை நீக்கியது) ¼ கிலோ
கொண்டைக் கடலை 100 கிராம்
தட்டாம்பயிறு 100 கிராம்
பச்சரிசி 300 கிராம்
பச்சை மிளகாய் 100 கிராம்
இஞ்சி 2 துண்டுகள்
வாழைக்காய் (பெரியது) 1
உப்பு தேவையான அளவு
பெருங்காயப் பொடி 1½ ஸ்பூன்
சீரகம் 2 ஸ்பூன்
கொத்தமல்லி சிறு கட்டு
ஓமம் அரை ஸ்பூன்
எலுமிச்சம்பழம் அரை மூடி
ந. எண்ணெய் (அ) தே. எண்ணெய் அரை லி.

**செய்முறை:**

கொண்டைக்கடலை, தட்டாம்பயறு, பச்சரிசி இவற்றை நன்றாகக் களைந்து ஒரு மணி நேரம் ஊறவைக்கவும். பேரிச்சம்பழத்தை சிறு சிறு துண்டுகளாக நறுக்கிக் கொள்ளவும். வாழைக் காயையும் தோல் சீவி, துண்டுகளாக நறுக்கிக் கொள்ளவும். இஞ்சியையும் கொத்தமல்லிக் கட்டையும் மண் போக அலம்பவும். பின்னர் ஊறவைத்த பொருட்களுடன் பேரிச்சம்பழம், வாழைக்காய், பச்சை மிளகாய், இஞ்சி, உப்பு, கொத்தமல்லி இவற்றையும் சேர்த்துக் கொண்டு ஆட்டுரலில் போட்டு, சிறிது சிறிதாக தண்ணீர் விட்டு அரைக்கவும். அரைத்த விழுது கெட்டியாகவும் பரபரப்பாகவும் இருக்க வேண்டும். அரைத்த விழுதை ஒரு பாத்திரத்தில் எடுத்து வைத்துக் கொள்ளவும்.

அரைத்த விழுதுடன் அரை மூடி எலுமிச்சம் பழத்தையும் பிழியவும். ஓமத்தையும், சீரகத்தையும் பொடி செய்து அதோடு பெருங்காயப் பொடியையும் சேர்த்து அரைத்த விழுதுடன் கலக்கவும். பின்னர்



ஒரு அகலமான, மெல்லிய துணியை எடுத்துக் கொள்ளவும். அரைத்த விழுதை சிறு சிறு வட்டங்களாகத் துணியின் மீது தட்டிக் கொள்ளவும். இந்த வட்டங்களை 2 நாள் வெயிலில் உலர்த்தவும். வடகம் நன்றாகக் காய்ந்தவுடன் எண்ணெயில் போட்டுப் பொரித்தெடுத்துக் கொள்ளவும். இது நீண்ட நாள் கெடாமல் இருக்கும். இந்த வடகங்களை டப்பாவில் போட்டு வைத்துக்கொண்டு விருந்தினர் வரும்போது உடனே எண்ணெயில் பொறித்துப் பரிமாறலாம்.

**எஸ். மகாலட்சுமி**
**—ஸ்ரீவில்லிப்புத்தூர்**



**இரண்டாம் பரிசு: சேமியா மிஷின்**

## பேரிச்சை ஸ்பெஷல்

**தேவையான பொருட்கள்:**

பேரிச்சம்பழம் 15
முந்திரிப் பருப்பு 15
சீரகம், மிளகுத் தூள் (1 டீஸ்பூன்)
நெய் ஒரு டேபிள் ஸ்பூன்
கடலை மாவு 100 கிராம்
அரிசி மாவு 50 கிராம்
சோடா உப்பு சிறிது.
மிளகாய்ப் பொடி அரை டீஸ்பூன்
உப்பு தேவைக்கேற்ப
மாங்காய்ப் பொடி அரை டீஸ்பூன்
பொரிப்பதற்கு டால்டா (அ) எண்ணெய்

அலங்கரிக்க
பொடியாக நறுக்கிய கொத்தமல்லி தழை

**செய்முறை:'**

முதலில் பேரிச்சம்பழங்களை லேசாக வாய் கீறி உள்ளிருக்கும் கொட்டைகளை அகற்றி விட வேண்டும்.

வாணலியில் ஒரு ஸ்பூன் நெய் விட்டு சூடான பின் முந்திரிப் பருப்புக்களைப் போட்டு பொன்னிறமாக வறுத்துக் கொள்ளவும். நன்றாக ஆறிய பின் சீரகம், மிளகுத்தூள் உப்புடன் போட்டு கல்லுரலிலோ அல்லது மிக்ஸியிலோ பொடித்துக் கொள்ளவும். பின் இந்தப் பொடியை வாய் கீறிய பேரிச்சம் பழங்களுக்குள் கொள்ளுமளவும் அடைத்து நன்றாக அழுத்தி மூடவும்.

கடலை மாவு, அரிசி மாவு, உப்புப் பொடி, மிளகாய்ப் பொடி, மாங்காய்ப் பொடி, சமையல் சோடா எல்லாவற்றையும் கலந்து இட்டமாக நீர் கலந்து கொள்ளவும்.

வாணலியில் டால்டா (அ) எண்ணெய் விட்டுக் காய்ந்தவுடன் பேரிச்சம் பழங்களை ஒவ்வொன்றாக மாவுக் கலவையில் முக்கி எண்ணெயில் போட்டு இரு பக்கமும் பொன் னிறமாக வேகவிடவும். கடைசியில் நறுக்கிய கொத்தமல்லி இலை தூவி அலங்கரித்துப் பரிமாறவும். உப்பு, இனிப்பு, புளிப்பு, காரம் ஆகிய நான்கு சுவைகளும் கூடி இருக்கும்.

**ராதா முருகன்**
**—பெங்களூர்**



**மூன்றும் பரிசு: எவர்சில்வர் அடுக்கு டப்பா**

## பேரிச்சம்பழ சுய்யம்

**தேவையான பொருட்கள்:**

பேரிச்சம்பழம் 250 கிராம்
பொட்டுக்கடலை 150 கிராம்
ஏலக்காய் 50 காசு
எண்ணெய் 400 கிராம்
சர்க்கரை அல்லது வெல்லம் 150 கிராம்

**செய்முறை:**

நன்றாகப் பார்த்து வாங்கிய பேரிச்சம் பழங்களைக் கொட்டை நீக்கி சுத்தம் செய்து மிக்ஸியில் இட்டு அரைத்துக் கொள்ளவும்.

ஏலக்காயைப் பொடி செய்து கொண்டு பின்பு பொட்டுக் கடலையைப் பொடித்து மாவாக் கிக்கொள்ள வேண்டும். பேரீச்சம்பழ கலவையினை சிறிது சிறு உருண்டைகளாக வைத்துக்கொள்ள வேண்டும். அத்துடன் ஏலப் பொடியைக் கலந்து கொள்ள வேண்டும்.

பொட்டுக் கடலை மாவை கெட்டியாகத் தோய்த்துப்போடும் அளவுக்கு கரைத்துக் கொள்ள வேண்டும். வாணலியில் எண்ணெயினை வைத்து இளங் காய்ச்சலில் பேரீச்சம்பழ உருண்டைகள் மாவில் தோய்த்துப் போட வேண்டும். வெந்த பின் எடுத்து விட வேண்டும்.

**வி. உஷா**
**—நன்னிலம்**



**ஆறுதல் பரிசு: எவர்சில்வர் பவுடர் டப்பா**

## டேட்ஸ் பேரீச்சம்பழ— மாங்கோ ஸ்குவாஷ்

### தேவையான பொருட்கள்:

பொன்னிறமான சதைப்பற்றுள்ள பேரீச்சம்பழங்கள் 200 கிராம்
நாரில்லாத இனிப்பான மாம்பழம் 2
முந்திரிப் பருப்புகள் 7, 8 துண்டுகள்
வெல்லம் 100 கிராம்
தேங்காய் முற்றியது ஒரு மூடி
ஏலக்காய் 4 (பொடித்தது)
நல்ல நெய் 50 கிராம்

முதலில் பேரீச்சம்பழங்களைச் சுத்தம் செய்துகொண்டு, கொட்டை நீக்கி, சிறு துண்டங்களாக்கிக் கொள்ளவும்.

நெய்யைச் சுடவைத்து முந்திரியை வறுத்து எடுத்துக் கொண்டு, பேரீச்சம்பழங்களை மிருதுவாக, லேசாக வதக்கிக் கொள்ளவும். நன்றாக ஆறவைக்க வேண்டும்.

மாம்பழங்களைத் தோல் நீக்கி சாறு பிழிந்து கொண்டு தேங்காய் துருவி எடுத்த பாலையும் வெல்ல, ஏலக்காய்ப் பொடியையும் நன்றாகக் கரண்டியால் மசித்துக் கொள்ள வேண்டும்.

இப்போது வதக்கி வைத்திருக்கும் பேரீச்சம்பழங்களையும், முந்திரிப் பருப்பையும் கலக்க வேண்டும். இப்போது ''டேட்ஸ் மாங்கோ ஸ்குவாஷ்'' ரெடி.

சப்பாத்தி, பூரி, புளிப்பில்லாத தோசைக்கு கூட்டு உணவு ஆகும். நல்ல அபார டானிக்கும் கூட.

**ஸ்ரீமதி கமலா மாதவராவ்**
**கல்கத்தா-29**

**ஆறுதல் பரிசு: எவர்சில்வர் பவுடர் டப்பா**

## பேரீச்சம்பழ டானிக்

### தேவையான பொருட்கள்:

250 கிராம் பேரீச்சம்பழம்
200 கிராம் பசு நெய்
300 கிராம் மலைத் தேன்
200 கிராம் சீமைக் கற்கண்டு

### செய்முறை:

கல்கண்டைப் பட்டுப் போல் இடித்துக் கொள்ளவும். ஒரு வாய் அகன்ற பாத்திரத்தில் தேனை விட்டு அதில் பேரீச்சம்பழத்தைக் கொட்டையை அகற்றி சிறு சிறு துண்டுக



ளாக்கிப் போடவும். பின்பு கற்கண்டையும் போட்டு நெய்யை சூடுபடுத்தி அதில் விட்டு நன்கு கலக்கவும். இந்தக் கலவையை இரு நாட்கள் சூரிய ஒளியில் வைத்து எடுத்துக் கொண்டு பிறகு காலையிலும் மாலையிலும் ஒரு வேளை சாப்பிட்டு வந்தால் உடம்பில் இரத்தம் ஊறும்.

**கே. லோகநாயகி**
**திருநெல்வேலி**

# பெண்ணே—இது உன் வாழ்க்கை!

உஷா சுப்ரமணியம்





ஒரு வாசகர் கடிதம் எழுதியுள்ளார். ''மங்கையர் மலரில் உங்கள் கட்டுரையைத் தவறாமல் படித்து வருகிறேன். உங்கள் கருத்துக்கள் சிந்தனையைத் தூண்டுகின்றன என்றாலும், வாழ்க்கை என்பது பெண்ணுக்கு மட்டுமே சொந்தமானது போலவும், திருமணங்களில் ஏய்க்கப்படுவதும், துன்பப்படுவதும் பெண்கள் மட்டுமே எனவும் நீங்கள் எழுதுவதில் எனக்கு உடன்பாடில்லை. ஆண் குடும்பத்தை சமூக ரீதியாக மட்டுமின்றி பொருளாதார ரீதியாகவும் காப்பதால் அவன் பொறுப்பும், தொல்லைகளும் மிக அதிகம். அவன் வாழ்க்கை எவ்வளவு சிக்கலானது என எண்ணிப் பாருங்கள்.'' இந்த நண்பரைப் போல் மேலும் பலரும் எண்ணக்கூடும். அவர்களுக்கு நான் சில விளக்கங்கள் கூற வேண்டும். இந்திய சமுதாயத்தில் ஆணுக்கும், பெண்ணுக்குமான இடங்கள் எவ்வளவு மாறுபட்டவை என்பதை பம்பாய் சமூக சேவகி ஒருவர் என்னிடம் கூறிய உண்மைக் கதையில் விளக்க முற்படுகிறேன்.

இந்தச் சமூக சேவகி வசித்து வந்த குடியிருப்பில் ஒரு கணவனும், அவன் தாயுமாக அந்த வீட்டுக்கு வந்த மருமகளை மிகவும் கொடுமைப்படுத்திக் கொண்டிருந்தனர். கணவன், மனைவியை அடித்து வீட்டுக்கு வெளியே தள்ளிக் கதவை மூடுவதையும், அந்தப் பெண் மாடிப்படியில் பல மணி நேரம் அழுது கொண்டே உட்கார்ந்திருப்பதையும் அக்கம்பக்கத்தினர் பார்த்திருக்கின்றனர். மாமியார் மருமகளைத் தலையில் குட்டுவதும், உடம்பில் இடிப்பதும் அனைவருக்கும் தெரியும். அழகாக, குண்டு முகத்துடன் திருமணமாகி வந்த பெண் ஆறே மாதத்தில் இளைத்துத் துரும்பாகப் போனது கண்ட நல்ல மனம் கொண்ட சிலர் ஒன்றுகூடி அவள் கணவனுடன் பேச முடிவெடுத்தனர். ''அவள் என் மனைவி. நீங்கள் யார் குறுக்கிட?'' என முதலில் மறுத்த கணவன், பின் மனைவியைக் கூப்பிட்டு, அனைவர் முன்னிலையிலும் ''உன்னை நாங்கள் துன்புறுத்துகிறோமா?'' என்று கேட்டான்.

''இல்லவே இல்லை, நான் மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறேன்'' என்றாள் அந்தப் பெண் பயத்தில் மிரள, மிரள. உதவ வந்தவர்கள் அவமானத்துடன் திரும்ப வேண்டியதாயிற்று.

அதன் பிறகு கொடுமைகள் இன்னும் அதிகமாகவே அவர்கள் மனம் தாளாமல் அந்தப் பெண்ணின் பெற்றோரிடம் ''உங்கள் பெண்ணை அந்தக் கயவனிடமிருந்து திரும்ப அழைத்து வந்து விடுங்கள்'' என்றார்கள்.

''ஐம்பதாயிரம் செலவழித்து இன்ஜினியர் பிள்ளைக்குக் கல்யாணம் செய்து தந்திருக்கிறோம். இன்னும் கல்யாணத்தின் கடனே கட்டி முடியவில்லை. அவசரப்பட்டு எப்படி அழைத்து வர முடியும்?'' என்று பெற்றோர் மறுத்தார்கள். அப்படியும், இரண்டு நாட்களாகத் தங்கள் பெண் ஒரு அறையில் பூட்டி வைக்கப்பட்டதை அறிந்து, மனம் கலங்கி, மாப்பிள்ளையைச் சந்தித்து பெண்ணைத் தங்களுடன் வீட்டுக்கு அழைத்து வந்தார்கள். அதுவும் எப்படி? ''உங்கள் பெண் அடங்காப்பிடாரி, பிடிவாதக்காரி, திமிர்.'' என்று மாமியார் கத்த, ''அவளுக்கு புத்தி சொல்லித் திருப்பி அழைத்து வருகிறோம்'' என்றார்கள் பெற்றவர்கள்!

வீட்டிலும் அந்தப் பெண்ணுக்கு பெற்றவர்களிடமிருந்தும், உடன் பிறந்தவர்களிடமிருந்தும் ஓயாத இடிபாடு. ஒரு மாதம் கழித்துக் கணவன் வீடு திரும்பிய அந்தப் பெண் வந்த நாலாம் நாளே, 'தற்செயலாக' புடவையில் காஸ் அடுப்பிலிருந்து நெருப்புப் பற்றி இறந்து விட்டாள்.

பெண் சமூக சேவகிகள் பலரும் பலத்த கூக்குரலிட்டு போலீஸ் கேஸ் எழுதினர். பெண்ணின் பெற்றோர் சாட்சி சொல்ல மறுத்தும், பம்பாய் நகரப் பத்திரிகைகள்

பத்தி, பத்தியாய்ப் படத்துடன் விவரித்தன. கேஸ் கோர்ட்டுக்கு வருவதற்குள்மனைவியை இழந்த கணவனுக்குப் புது மனைவி கிடைத்தாள். மாமியாருக்கு வேறு மருமகள். இந்த நாட்டில் இதில் என்ன அதிசயம்? ஒன்றுமில்லைதான்.

புதுமணப்பெண் யார் தெரியுமா? வயிறும், உடம்பும் சேர்ந்து எரிந்த அந்தப் பாரதப் பெண்ணின் சொந்த சகோதரி. மாப்பிள்ளை முதல் திருமணத்திற்கு வாங்கிய வரதட்சிணையை 'அட்ஜட்ஸ்' செய்து கொள்வதாகச் சொன்னாராம். ''கணவன், குடும்பம், என்றால் ஆயிரம் தான் இருக்கும். என் முதல் பெண்ணுக்கு சாமர்த்தியம் போதாது இவள் அப்படியில்லை'' என்றாராம் பெண்ணின் தந்தை முதற் பெண்ணின் சிதைச் சூடு கூட ஆறுவதற்கு முன்.!

வாழ்க்கை ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவானதுதான். ஆனால் வாழ்விலிருந்து



ஆண் பெறுவதும், பெண் பெறுவதும் சமமில்லை. பிடிக்காத மனைவியை விட்டுக் கணவன் ஓடினால் அவனுக்கு ஓடுகாலி என்று பட்டம் கிடைக்காது. பாவம் என்ற இரக்கம் தான் கிடைக்கும். ஆண் எவ்வளவு தவறு செய்தாலும் அதனால் பாதிக்கப்படாமல் வாழ முடியும். அல்லது. தவறைத் திருத்திக் கொள்ளவும் முடியும். ஒரு பெண் நியாயமான காரணங்களுக்குக்கூட சமுதாய வரம்புகளை மீற முயன்றால், அவள் ஒழுக்கம், குணம் அத்தனையும் கேள்விக் குறியாகிறது. பெற்ற பாசம் கூடப் பெண்ணைப் பொறுத்தவரை மாறுபடுகிறது.

''விவாக ரத்தான பெண்களை, அவர்கள் எவ்வளவு தகுதி வாய்ந்தவர்களானாலும் எங்கள் கம்பெனியில் நாங்கள் வேலைக்குச் சேர்ப்பதில்லை. அவர்கள் ஒழுக்கத்தைக் கெடுத்து விடுவார்கள்'' என்றார் ஒரு உயர்தரக் கம்பெனியின் தலைமை அதிகாரி! இத்தகைய சமுதாய அநியாயங்கள் சட்டத்தின் பிடியில் சிக்கவே வழியில்லை. அதனால் தான் பெண்களிடம் கூறுகிறேன். 'பெண்ணே உன் வாழ்க்கையை நீதான் காத்துக்கொள்ள வேண்டும் என: பெற்றோரிடம் கெஞ்சுகிறேன் உங்கள் பெண்ணின் எதிர்காலம் பற்றிய சிந்தனையை, செயல்களை, பெற்ற கடமைக்காக, மட்டும் கடனெழுவே என்று செய்யாமல், அவள் மகிழ்ச்சிக்காக அமைத்துக் கொடுங்கள் என. மகளிரிடம் எடுத்துக் கூறுகிறேன், அடுத்த பெண்ணின் துன்பத்தைக் கண்டு வம்பு பேசி உங்கள் இனத்தின் தாழ்வுக்கு மேலும் மேலும் வித்திடாமல், பெண்ணினத்தின் மீது மரியாதை வைத்து, துன்பப்படுபவருக்கு உதவி, சமுதாயத்தில் உங்கள் இடத்தைச் சரிசமமானதாக ஆக்குங்கள் என்று.

மேல்நாடு சென்று திரும்பிய பின் எனக்கு ஒரு புதுப்பிரச்சினை. திடீர் திடீர் என நான் முன்பின் அறியாதவர், ஓரளவு அறிந்தவர் எனப் பலரிடமிருந்தும் கடிதமும், போனும் வருகிறது. ''எங்கள் பெண்ணுக்கு 'பாரின்' மாப்பிள்ளையாகப் பார்க்கிறோம். நீங்கள் மூன்று மாதத்தில் நிறையப் பேரைச் சந்தித்திருப்பீர்கள், யாரையாவது சொல்ல முடியுமா?' என்று. இது போதாததற்கு இளம் பெண்கள் பலர், என்னிடம், ''நான் அமெரிக்காவில் வசிப்பவரைத்தான் மணம் செய்து கொள்வேன். நீங்கள் யாராவது 'அவெய்லபிள் பாச்லர்' தெரிந்தால் என் பெற்றோரிடம் கூறவும்'' என, இளம்பெண்கள் பலருடன் பேசிய போதும் சில விஷயங்கள் புரிகிறது. இவர்கள் மாமனார், மாமியார், உறவினர் 'தொல்லையில்லாத சுதந்திர வாழ்க்கை வாழ விரும்புகிறார்கள். வாழ்க்கையின் ஆரம்பமே செல்வச் செழிப்பில் அமைய வேண்டும் என நினைக்கிறார்கள். அமெரிக்க வாழ்க்கையில் கலர் டி. வி., வீடியோ, டிஸ்கோ, விதவிதமான உடை என நாகரீகமாக் இருக்க முடியும் என நம்புகிறார்கள். இவர்களில் எவருமே மணக்கப் போகிறவனுடைய குணத் தகுதிகளை எண்ணி கூடப் பார்ப்பதில்லை. இத்தகைய 'பாரின்' மாப்பிள்ளையுடன் திருமணங்கள் பல






பெண்ணும், பிள்ளையும் சந்திக்காமலே, விசாரிப்புகள் இல்லாமலே நடக்கின்றன. அமெரிக்கா வாழ்க்கை மட்டுமே இந்தத் திருமணங்களை மகிழ்ச்சியாக வைக்கின்றதா? சிவசங்கரியின் "47 நாட்கள்" ஒரு உண்மைக் கதை என்பது எத்தனை பேருக்கு தெரியும்?

தினமும் மாறிவரும் மேல்நாட்டுவாழ்க்கையில் தாக்குப் பிடிக்க எத்தனை இந்தியப் பெண்களுக்குத் திறன் இருக்கிறது? அழகிலும், வேலைத் திறனிலும், சுதந்திர மனப்பான்மையிலும் நம்மை விடப் பல படிகள் முன்னேறிவிட்ட மேல்நாட்டுப் பெண்களுக்கு இணையாகச் செயல்பட எவ்வளவு பேரால் முடிகிறது? இவர்கள் இங்கே நினைப்பது போல் 'எல்லா இந்திய ஆண்களும் தங்கள் மனைவி நாகரிகமாக வாழ்வதை, டிஸ்கோ, பார் என அனுபவிப்பதை விரும்புகிறார்களா? அல்லது, அப்படி அனுபவிக்கும் செல்வச் செழிப்பு அனைவருக்கும் உள்ளதா? இரண்டாயிரம் டாலர் சம்பளம் என்பது நம் ரூபாயில் இருபதாயிர ரூபாய் மாத சம்பளமாகும், உண்மை, ஆனால் இரண்டாயிரம் டாலரின் வாங்கும் சக்தி அதே அளவுள்ள ரூபாய்க்கும் குறைவு என்று அறியாமல் என்னவெல்லாம் எதிர்பார்க்கிறார்கள்? மேல்நாட்டில் ஏழைவீட்டில் கூட இரண்டு கார் இருக்கலாம், டி. வி. இருக்கலாம். ஆனால் ஒரு உயர்தர உடை வாங்க மாதக்கணக்கில் திட்டமிட வேண்டும். இதெல்லாம் புரியாமல், மனமெல்லாம் கனவாக, அமெரிக்க மண்ணில் இறங்கி ஒரிரு வருடத்திலேயே மனம் வெறுத்துப் போய்விடும் பல பெண்களை நான் சந்தித்தேன்.

அறிவும், திறமையும் உள்ள பெண்கள் முழுச்சோபையுடன் விகசிக்கத் தக்க நாடுகள் அவை. ஆனால் சாதாரணப் பெண்களுக்கு அங்கே ஏமாற்றங்கள் மிக அதிகம். "செக்ஸை சாதாரண விஷயமாக எண்ணும், மிக அழகான பெண்களுடன் தினம் தினம் கணவன்மார்கள் பழக வாய்ப்பிருக்கும். அவர்களின் போட்டிக்குத் தயாராக இருக்கும் 'டென்ஷன்'லிருந்து இங்கு விடுதலையே கிடையாது" என்ற கமலாவின் வாழ்க்கையை உங்கள் முன் வைக்கிறேன். மேல்மட்டத்திலுள்ள ஒரு இந்தியரின் மனைவி "என் கணவரின் வெளியூர் விஜயம் அத்தனையிலும் அவர் அழகான செக்ரட்டரி கூடவே செல்வாள். அவர்கள் உறவு எப்படியிருக்கும் என்றெல்லாம் நான் ஆராயத் துவங்கினால் என் திருமணம் தாங்காது. இங்கே வெற்றிக்கும், சமுதாய ஏற்றத்திற்கும், செல்வத்திற்கும் நாங்கள் நிறையவே இழக்கிறோம்" என்றாள்.

எல்லாவற்றிற்கும் மேல் வெளிநாட்டுப் பிரஜை, தோற்றத்தில் மாறுபட்டவர் என்பதனால் தனிமை உணர்ச்சி ஏற்படும் இந்தத் தனிமை உணர்ச்சி ஆண், பெண் இருவரையும் பாதிக்கிறது. இந்தத் தனிமை உணர்ச்சியினால் கணவன், மனைவி இருவரும் மிகவும் நெருங்கி வந்து நண்பர்களாக இருப்பதையும் மேல்நாட்டில் மட்டுமே காணலாம். மேல்நாட்டில் வசிக்கும் பல ஆண்களுக்கு 'நான் ஆண்' என்கிற வறட்டு மமதையும் இருப்பதில்லை. ஆனாலும், மேல்நாட்டில் வசிக்கும் ஆணுடன், விவரமறியாமல் திருமணம் செய்து கொள்வது அறியாமை. பெண்கள் மேல்நாட்டு வாழ்வு பற்றிய எண்ணங்களைத் தவறான முறையில் வளர்த்துக் கொண்டிருந்தாலும் பெற்றவர்கள் இந்த வாழ்வின் குறை, நிறைகளைப் பற்றிக் கேட்டறிந்து, பெண்களுக்கு விளக்குவதுடன், திருமணத்திலிருந்து 'மேல்நாட்டு மருமகன்' என்ன எதிர்பார்க்கிறான் என்று புரிந்து கொள்ள வேண்டும்.

கனவுகளும், கற்பனைகளும் வாழ்வுக்கு இன்றியமையாதவை. திருமணம் பற்றிய




## தமிழகத்தின் சிறப்புகள் எவை, எவை?

**கோவில்,**
**கோபுரம்,**
**சங்கீதம்,**
**நாதஸ்வரம்,**
**பரதநாட்டியம்,**
**இட்லி,**
**தோசை,**

# நரசூஸ் காபி!



**ஜீவனுள்ள ஒரே காபி!**

# நரசூஸ்

**"தெர்மலோ" காபி!**



**நரசூஸ்**
**காபி கம்பெனி**
சேலம் 636 007.
கிளைகள்:
தமிழ்நாடெங்கும்.

ADWAVE NCC 2165

ரொமான்டிக் கற்பனைகள் இல்லாத நார்மலான ஆணோ, பெண்ணோ இருக்க மாட்டார்கள். ஆனால் கற்பனைகளுக்கும், நிஜங்களுக்கும் இடையில் குழப்பம் தோன்றும் போது வாழ்வு கேள்விக்குறியாக மாற நிறைய வாய்ப்பு உள்ளது. இது பாகுபடுத்தத் தெரியாத முதிர்ச்சியற்ற நிலை. இந்தியாவில் உடலுறவு அனுபவமும் திருமணத்துடன் மட்டும் தொடங்குவதால், மேல்நாட்டுப் பெண்களைவிட நமக்கு ரொமான்டிக் கற்பனைகள் அதிகம். ஆனால் அவை செயல்பெற வாய்ப்புக்களோ மிகக் குறைவு. கணவன் தனக்குப் பிடித்த சினிமா நடிகரை ஒத்து ஸ்டைலிலோ, தோற்றத்திலோ இருக்க வேண்டும் என்று விரும்பி, அப்படியே தேடித் திருமணமும் செய்து கொண்ட ஒரு பெண்ணுக்கு, கணவர் வெயில் என்று க்ளோஸ்கட் க்ராப் அடித்து வந்தவுடன் ஹிஸ்டீரியாவே வந்து விட்டது. இந்தத் தோற்ற மாயை மறைந்து, குணங்களின் பரிச்சயம் ஏற்படும்போது, இவள் இன்னும் எத்தனை அதிர்ச்சிகளைத் தாங்க வேண்டும்? வாழ்க்கைத் துணைவரை அவராக ஏற்பதுதான் மனப்பக்குவமடைந்த பெண்ணின் செயல். அவரை நம் கனவுக் கற்பனைகளின் பிரதிபிம்பத்தில் பொருத்திப்பார்க்க முற்படுவது அறியாமை. குறை, நிறை நிறைந்தவர்கள் தான் எல்லா மனிதரும்.

வாழ்வின் அடிப்படை அன்பு என்பதை மறுக்க முடியாது. ஆனால் அன்பு மட்டும் திருமண வாழ்வாகாது. வாழ்வில் தினசரிச் சம்பவங்களான ''ரொடீன் ஜாப்ஸ்''க்கும் ஒரு மணப்பெண் தயாராக இருக்க வேண்டும். தினசரி காலை எழுந்து, ஒரே போல் வீட்டு வேலை செய்து, ஒரேமாதிரி உணவை உண்டு ஒரேபோல் வாழும் அலுப்பு வாழ்க்கை தான் திருமணமா?'' எனச் சலித்துக் கொள்ளும் பல இளம் பெண்களைச் சந்திக்கிறோம். இந்த அலுப்பின் அதீத நிலை 'போர்டமாக' உருவாகி விரக்தியில் முடிகிறது. தினசரி வாழ்வில் சின்னச் சின்ன சம்பவங்களில் சந்தோஷப்படத் தெரிந்துகொள்ள வேண்டும். கணவன், மனைவி உறவில் எல்லாமே கிளர்ச்சி அளிக்கக்கூடியவை அல்ல. எல்லாத் திருமணங்களும் ரொமான்டிக்காக இருக்காது. தினம் ஒரு புகழாரம், வாரத்திற்கு ஒரு பரிசு போன்ற கிளுகிளுப்புகள் திருமணத்தில் அதிக நாள் நிலைப்பதில்லை. அத்துடன் இன்றைய அமைப்பில் தொழில் துறையிலும் ஆண் நிறையக் கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது. எனவே, கணவன், தன்னைச் சுற்றிச் சுற்றி வர வேண்டும். ஓயாமல் காதல்மொழி பேச வேண்டும். 'ஓஹோ' என்று புகழ வேண்டும் என்று விரும்பும் பெண்களுக்கு மிஞ்சுவது ஏமாற்றமே. மனைவியின் இத்தகைய எதிர்பார்ப்புகளும் கணவனுக்கு ஆயாசத்தைத் தான் தருகின்றன. ஒரு சின்னப் பார்வை, சொல், செயல், பரிவு இவை அளிக்கும் ஆனந்தமே தனிதான்.

''திருமணத்தின் வெற்றி என்பது சரியான துணையைத் தேடிப்பிடிப்பதில் இல்லை, நாம் சரியான துணையாக வாழ்வதில் உள்ளது'' என்ற பாஸ்டர்வுட் என்ற அமெரிக்க எழுத்தாளரின் வார்த்தைகள் என்னை மிகவும் கவர்ந்தவை. வாழ்வில் ''மிஸ்டர் ரைட்'' என்றோ ''மிஸஸ் ரைட்'' என்றோ, ''மேட் பார் ஈச் அதர்'' தம்பதி என்றோ யாருமே கிடையாது. நல்ல மனைவி என்பவள் யார்? அந்தக் காலத்துப் 'பின் தூங்கி முன் எழும்' பத்தினித்தனம் இன்று அர்த்தமற்றது. நல்ல மனைவிக்கு என்று எந்தவிதமான டிபனிஷனும் கிடையாது. எந்த நல்ல மனைவியும் யாருக்கு வேண்டுமானாலும் பொருத்தமானவளாக இருக்க முடியாது. தான் மணந்த ஆணுக்கு ஏற்றபடி வாழ்பவள் நல்ல மனைவி. அந்த வாழ்வில் தன்னை இழக்காமல் கம்பீரமாகவும், கௌரவமாகவும், அதேசமயம் வளைந்து கொடுத்தும் வாழ்பவளே நல்ல மனைவி. கணவனுக்கு நண்பனாக இருப்பவள் நல்ல மனைவி. எனவே 'இப்படி வாழ வேண்டும்' என்ற முடிவான எண்ணத்துடன் வாழ்க்கையை அணுகுவதை விடத் தம் துணையின் தேவைகளுக்கு ஏற்ப வாழ்வை அமைத்துக் கொள்வது தான் புத்திசாலித்தனம்.



**மாவடு தீர்ந்துவிட்டால் அந்த ஜலத்தை வீணடிக்க வேண்டாம். வேப்பம் பூவை சுத்தமாக பொறுக்கி இந்த ஜலத்தில் ஊறவைத்து வெயிலில் உலர்த்தி, திரும்பவும் ஊறவைத்து, நன்றாக வெயிலில் காயவைத்து பாட்டிலில் வைத்துக்கொள்ளவும். வேப்பம் பூவில் கசப்பு என்பதே இராது. ஒரு ஸ்பூன் வேப்பம்பூவை நெய்யில் வறுத்து சூடான சாதத்தில் பிசைந்து சாப்பிட்டால் ருசியாக இருப்பதுடன் வயிற்று வலி, வாயு கோளாறுக்கும் மிகநல்லது.**

**-லலிதா சந்தரம்**



இருவரும் இல்லம் திரும்பும்போதே வாடிப்போகிறார்கள்...

# ஆனால் க்ளோக்கீன்-டி சக்தியினால்... இதோ இப்போது பாருங்களேன்!




புதிய மேம்பட்ட க்ளோக்கீன்-டி, நாளும் பொழுதும், அவர்களைக் குன்றாத தெம்புடன் திகழச் செய்கிறது. க்ளூகோஸ், கால்சியம் பாஸ்பேட் மற்றும் வைட்டமின்-டி, செறிந்த க்ளோக்கீன்-டி, இப்போது இன்னும் விரைவில் கரைகிறது. மேலும் கவர்ச்சியான புதிய உறையில் கிடைக்கிறது.

என்றும் க்ளோக்கீன்-டி பழக்கம் நன்று!






**புதிய மேம்பட்ட க்ளோக்கீன்-டி நாளும் பொழுதும் தெம்பூட்டும் சக்தி!**

ULKA-GD-2-83 TAM

"உன் நன்மைக்காகத்தான் சொல்கிறேன் புவனா... இந்த இடம் வேண்டாம்!'' என்றாள் கமலா.

''ஏன் வேண்டாம்? படிப்பு இல்லையா?... அழகு இல்லையா?... வேலை இல்லையா? நல்ல குடும்பம் இல்லையா? ஜாதகங்கள் பொருந்த வில்லையா?'' எனக் கேட்டார் அவள் கணவர் சாம்பமூர்த்தி.

''எல்லாம் சரியாகத்தான் இருக்கிறது... இருந்தாலும் வேண்டாம்.''

புவனா ஒன்றும் சொல்லவில்லை. அவள் ஏற்கனவே முடிவு செய்து விட்டிருந்தாள். தியாகுதான் அவள் கணவன்.

முதன் முதலில் அவள் தியாகுவுடன் பழக ஆரம்பித்ததும், அவன் மனம் அவளுக்குப் புரிந்தது. அவள் வீட்டிற்கு எந்த விஷயத்தையும் மறைத்து வைக்கவில்லை.

''அப்பா! அவரை எனக்குப் பிடித்திருக்கிறது. நம்ம ஜாதிதான். இப்போதே சம்பளம் ஆயிரத்து நூறுக்கும் மேலே... நல்லபடியா இன்னும் உயர்ந்த நிலைக்கும் போவார்னு நம்பிக்கை இருக்கு.... அவர் போட்டோ இதோ!''

சாம்பமூர்த்தி பார்த்தார்.... கமலா கூடத்தான். அப்போதும் அவள் தடை ஏதும் சொல்லவில்லை.

# வேண்டாம்மா புவனா!

அன்னம்

''ஜாதகப் பொருத்தம்'' என ஆரம்பித்தார் சாம்பமூர்த்தி.

''நீ கேட்பாய் என்பது தெரியும். இது தான் அவருடைய ஜாதகம். என் ஜாதகம் அவரிடம் ஏற்கனவே இருக்கிறது. அவர் அம்மா, அப்பா எல்லோருக்கும் சம்மதம். அவர்கள் பார்த்து விட்டார்கள். ஜாதகங்கள் பொருந்தி இருக்கின்றனவாம்.''

''அப்புறம் என்ன?'' என்று கேட்டார் சாம்பமூர்த்தி.

கமலாவுக்கு இன்னும் ஒரு சந்தேகம்.

''லௌகீகம்.... சீர் வரிசை...'' என இழுத்தாள்.

''அதுகூட நாங்கள் பேசியாகி விட்டது. ஆளுக்குப் பத்தாயிரம் ரூபாய் போட்டுக் கல்யாணத்தை நடத்த வேண்டியது — மிக அவசியமான ஜவுளிகளுக்கும், திருமாங்கல்யம், கல்யாணச் செலவுகளுக்காக... கல்யாணத்திற்குப் பிறகு — அதிகம் செலவழித்து இருந்தால் அதில் பாதி நாம் ஒப்புக்கொள்ள வேண்டும்.... மீதம் இருந்தால், இருவரும் பங்கிட்டுக் கொள்ள வேண்டும்.''

''பரவாயில்லை இப்படி எல்லாக் கல்யாணங்களும் நடந்தால்...'' என இழுத்தார் சாம்பமூர்த்தி.

''எல்லோரும் தியாகு போல் ஆவார்களா?'' என நினைத்துக் கொண்டாள் புவனா.

அப்போது பூரண திருப்தியோடு இருந்த கமலா இப்போது எப்படி மாறினாள்?

• • •

தியாகுவின் பெற்றோர் மகாதேவனும் செல்லமும் பெண் பார்க்க வந்தபோதுதான் கமலா திடுக்கிட்டுப் போனாள்.

இத்தனைக்கும் அவர்கள் முன் பின் தெரியாதவர்கள் இல்லை. நிச்சயமாக — அதிக முகமலர்ச்சியுடன் வரவேற்கப்பட வேண்டியவர்கள். செல்லம் அவள் ஊரைச் சேர்ந்தவள் மட்டும் இல்லை. உயிர்த் தோழியும் கூட.

''உன் பொண்தானடி எனக்கு மருமகளாக வரப்போகிறாள்? ரொம்ப ரொம்பத் திருப்தி. மனத்துக்கு நிறைவு!'' எனப் பூரித்துப் போனாள் செல்லம்.

கமலாவின் முகத்தில் ஈ ஆடவில்லை.

ஒப்புக்கு உபசரித்துவிட்டுப் போன பிறகு கமலா தன் ஆட்சேபத்தைக் கிளப்பினாள்.

''இந்தச் செல்லம் மகாதேவனுக்கு முதல் தாரம் இல்லை!'' என்றாள் கமலா.

''இருக்கட்டுமே! மாப்பிள்ளைக்கு அம்மா அவள்தானே!'' என்றார் சாம்பமூர்த்தி.

''இந்த மகாதேவனுடன் கூடப் பிறந்தவர்கள் ஐந்து பேர்... பெரிய குடும்பம்...''

''இருக்கட்டுமே! தியாகுவும் புவனாவும் தனியாகத்தானே இருக்கப் போகிறார்கள்?''

''நான் சொல்வதைக் கேளுங்கள்! மகாதேவனும் ஐந்து தம்பிகளும் அவர் அப்பாவின் இரண்டாவது தாரத்துக் குழந்தைகள்.''

சாம்பமூர்த்தி முகம் சுளித்தார்.

''அது மட்டுமில்லே. மகாதேவனுடன் கூடப் பிறந்த அத்தனை பேருக்கும் முதல் கல்யாணம் நல்லபடியாக அமையவில்லே. எல்லாரும் ஒரு வருஷம்... ரெண்டு வருஷம்.''

சாம்பமூர்த்தியின் மனத்தில் ஒரு சலனம் ஏற்படத் துவங்கியது.

''அவர்கள் குடும்பத்தில் பெண் கொடுக்க யாரும் பயப்படுவார்கள். அது ஒரு பரம்பரைச் சாபம் போல் தொடர்கிறது. சொந்தத்தில் பெண் கேட்டால் யாரும் தர மாட்டார்கள்.... எல்லா சம்பந்தமும் அந்நியம் தான்....!''

சாம்பமூர்த்தியும் கமலாவும் புவனவைத் தன் விழிகளால் கெஞ்சினர்..

''அம்மா... நீ சொல்வதை யெல்லாம் நான் நம்பப் போவது இல்லே. எனக்கு மட்டும் ஆயுசு கெட்டின்னு என் தலையிலே எழுதி வச்சிருந்தா எந்தச் சாபம் என்னே என்ன

### பழமொழி

நாக்குக்கு நாணம் இல்லா விட்டால் வயத்துக்கு வாட்டமில்லே.
ஊசியை ஒத்தேலே சுமப்பேன?
எலி, புண்ணுக்குக் கட்டியை கருவினற் போல
குளத்திலே கோவிச்சுண்டு கால் கழுவாமல் போனும்.
அடுப்புக் குற்றம் சோறு குழைந்தது.
ஆம்படையான் குற்றம் பெண்ணுகப் பிறந்தது.
முட்டாளுக்கு மோர்ச் சாதம்

பண்ணும்? ஒரு பெண் விதவையா வாழுறதை விடச் சுமங்கலியாப் போறது எத்தனேயோ மேல்.''

''இதெல்லாம் எழுதப் பேசப் படிக்க நன்னு இருக்கும்டி... பெத்தவ மனசுல என்ன பயம் இருக்கும் தெரியுமா?''

புவன ''விருட்'' என்று எழுந்தாள்.

''உங்கள் பேச்சை மீறி நான் எதுவும் செய்ய மாட்டேன் ஒன்றைத் தவிர. இந்தக் கல்யாணம் நடக்கா விட்டால் என் ஜென்மத்தில் எனக்குக் கல்யாணமே கிடையாது. நீங்கள் கண் மூடும் வரை இந்தப் புவன இப்படியே உங்கள் கண் முன் நிற்பாள்!''

அவள் போய் விட்டாள்.

கமலாவும் சாம்பமூர்த்தியும் யோசித்தார்கள். பெண்ணின் பிடிவாதம் அவர்களுக்குத் தெரியும்.

சாம்பமூர்த்தி ஒரு முடிவுக்கு வந்தார்.

''அவள் தலைவிதி எப்படியோ அப்படியே நடக்கட்டும். அவள் விருப்பத்திற்குக் குறுக்கே நாம் இருக்க வேண்டாம்!''

தியாகு புவனவின் கழுத்தில் தாலியைக் கட்டினன்.

• • •

**ஆறு** மாதங்களுக்குப்பின்... இது புவனுவிற்கு நான்காவது மாதம்.

புவனவின் வயிற்றில் குழந்தை வளர வளர கமலாவின் நெஞ்சில் பயம் பெருகிக் கொண்டே வந்து. அவள் பெற்றுப் பிழைக்க வேண்டுமே! — எல்லாத் தெய்வங்களையும் வேண்டிக் கொண்டாள்.

தியாகுவும் புவனவும் கிராமத்துக்கு ஒரு மாத லீவில் போயிருந்தார்கள். சீமந்தத்துக்கு நாள் குறித்து அழைப்பு வந்தது. கமலா எல்லா வகைச் சீர்களையும் எடுத்துக் கொண்டு போய்ச் சேர்ந்தாள்.

இரவில் திடீர் திடீர் என்று எழுந்து உட்காருவாள். தூங்கிக் கொண்டிருந்த தன் மகளை உற்றுப் பார்ப்பாள். நெற்றியில் கைவைத்துத் தடவுவாள். விம்மி விம்மி அழுவாள்.

சீமந்தத்திற்கு முதல் நாள் சுமங்கலிப் பிரார்த்தனை. அந்தக் குடும்பத்தில் தொடர்ந்து நடந்து வரும் அவலங்களை நிறுத்த மறைந்துபோன சுமங்கலிகளை வேண்டிக் கொள்ளும் நாள்.

மனையில் புதுப் பட்டுப் புடவை சுற்றி வைத்திருக்க — சுமங்கலிகள் பரிமாறப்பட்ட இலைகள் முன் அமர்ந்திருந்தார்கள்.

மகாதேவனின் ஐந்து சகோதரர்களுடனும் அவர்கள் குடும்பம் வந்திருந்தது. அவர்களில் ஒருவர் நோட்டு ஒன்றைப் பிரித்துப் படிக்க — அந்தக் குடும்பத்தில் சம்பந்தப் பட்டுச் சுமங்கலிகளாக மறைந்து போன ஒவ்வொருவரின் பெயரையும் செல்லம் அழைத்துப் பிரார்த்தனையை ஏற்றுக் கொள்ளும்படி வேண்டினுள்.

கமலாவின் உடல் நடுங்கியது. அடுத்த வருஷம் இது போன்ற ஒரு நாளில் புவனவின் பெயரையும் சேர்த்துப் படிப்பார்களா?

செல்லம் கடைசியாக அழைத்த ''சங்கரி' யாரென்பது கமலாவுக்குப் புரியவில்லே. அந்தக் குடும்பத்தில் மகாதேவன் ஒருவருக்குத்தான் பெண். மற்றவர்கள் எல்லோருக்கும் பிள்ளைகள்தானே!

சாப்பாடு ஆன பிறகு கமலம் செல்லத்தை மெதுவாக விசாரித்தாள்.

செல்லம் திடுக்கிட்டுப் போனுள். முதலில் தயங்கியவள் பின்னர் ரகசியமாகச் சொன்னுள். ''நீ கவனித்தாயா? என்னேத் தப்பாக நினைக்காதே... இது தியாகுவுக்குத் தெரியாது. தெரியவும் கூடாது. சங்கரி தான் தியாகுவோட அம்மா... அவருக்கு ரொம்ப வேண்டியவர் மனேவி. நானும்

சங்கரியும் ஒரே நர்ஸிங் ஹோமில்தான் பிரசவத்திற்குச் சேர்ந்தோம். எனக்குப் பிறந்த பெண் குழந்தை பத்து நாட்கள் கூடத் தங்கவில்லை. சங்கரிக்குப் பிள்ளை பிறந்தது. இரண்டே மாதங்கள்தான் திடீரென்று கண்களை மூடிவிட்டாள். சங்கரி வீட்டுக்காரர் இடிந்து போய்விட்டார். குழந்தையை எங்களிடம் கொடுத்து விட்டு இரண்டு மாதங்களில் வருவதாகப் போனவர்தான். திரும்பவில்லை. தியாகுவை எங்கள் பிள்ளையாகத்தான் வளர்த்து வந்திருக்கிறோம். உன்னிடம் நான் மறைக்க முடியவில்லை. புவனாவிடம் கூடச் சொல்லாதே, என்ன!''

கமலாவுக்கு நிம்மதி. புவனாவிற்கு இனி ஒரு குறையும் இல்லை. எந்தத் தோஷமும் புவனாவை ஒன்றும் செய்யாது. தியாகுதான் அவர்கள் வீட்டுப் பிள்ளை இல்லையே!

தாழ்ந்த குரலில் செல்லம் தன் மருமகளிடம் சொன்னாள்: ''நான் உன் அம்மாவிடம் சொன்னதை யெல்லாம் நீ கேட்டுக் கொண்டிருந்தது எனக்குத் தெரியும். அத்தனையும் கட்டுக்கதை. தியாகு என் வயிற்றுப் பிள்ளைதான். உன் அம்மாவின் பயத்தை விரட்ட நான் சொன்ன பொய்!''

''நீங்க நிஜம்னு சொன்னாக் கூட நான் நம்ப மாட்டேன் அத்தை! அவருக்குப் பெண் வேஷம் போட்டால் உங்கள் இரண்டு பேருக்கும் வித்தியாசம் கண்டு பிடிக்க முடியாது... அப்படி ஒரு ஜாடை!'' என்றாள் புவனா சிரித்தபடியே.

# கூந்தலைப் பார்த்துக் குணம் கூறு!

-: மெர்வின் :-

பெண்களுக்கு அமைந்திருக்கும் கூந்தல், அலங்காரத்தைக் கொண்டு பெண்ணின் மன இயல்புகளைக் கூறி விட முடியும் என்கிறார்கள்.

அழுத்தமாக கூந்தலை வாரி முடித்திருக்கும் பெண் கொஞ்சம் முன் கோபம் உள்ளவளாக இருப்பாளாம்.

சாந்தமான சுபாவம் உள்ள பெண் கூந்தலை மிகவும் தளர்ச்சியாகவும் ஒழுங்காகவும் முறையாகவும் வாரியிருப்பாளாம்.

சிடுசிடுத்த சுபாவம் உள்ளவளாக இருந்தால் கூந்தல் அலங்காரத்தில் அதிகமாக அக்கறை காட்ட மாட்டாள். பெரும்பாலும் தலையை விரித்துப் போட்டுக் கொண்டிருப்பாளாம்,



# பற்களைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள்!

**சென்ற மாதத் தொடர்ச்சி...**

சில வைரஸ் எனப்படும் நுண் கிருமிகளும் துர்நாற்றத்துக்குக் காரணம். இவை எளிதில் விலக்கக் கூடியவையே.

குடலில் ஜீரண உறுப்புக்களின் கோளாறினாலும் வாயில் துர்நாற்றம் ஏற்படும். குறிப்பாக இரவு ஷிப்டுகளில் வேலை செய்பவர்களுக்கு அமிலம் அதிகமாகச் சுரப்பதாலும், காப்பி, டீ மற்றும் வாசனைப் பாக்குகள் உபயோகிப்பவர்க்கும் ஏற்படும்.

பல் செட்டுகள் சரியாக பராமரிக்கப் படாவிட்டாலும் துர்நாற்றம் ஏற்படும்.

நுரையீரலில், டி. பி. போன்ற நோய்களால் சீழ் பிடித்தால் துர்நாற்றம் ஏற்படும்.

சிகிச்சை அளிக்கப்படாத சொத்தைப் பல்லினாலும் ஏற்படும்.

துர்நாற்றம்ஏற்பட்டவுடன் பற்பசையை மாற்றிப் பார்ப்பதாலோ விளம்பரங்களில் மயங்கிக் கடைகளில் விற்கும் திரவங்களை உபயோகிப்பதாலோ நாற்றம் நீங்காது.

மேலும் அடிக்கடி Mouth wash உபயோகித்தல் கெடுதலை விளைவிக்கும்.

ஆகவே துர்நாற்றம் ஏற்பட்டவுடன் மற்றவர்கள் உங்களிடமிருந்து விலகும் முன் பல்மருத்துவரை அணுகுங்கள்.



அடுத்து பற்கள் எடுக்கப்பட வேண்டும் என்று பல் மருத்துவர் கருதினால் அந்தப் பற்களை அகற்றுவதே நல்லது.

இல்லாவிடில் உடலில் பல விதமான நோய்களுக்கு வித்திடுவதாகவோ அல்லது இருக்கும் நோயை அதிகரிப்பதாகவோ அமையும். உதாரணமாக முடக்கு வாதம் எனப்படும் 'ஆதரைஸ்டிஸ்' சொத்தைப் பற்கள் அல்லது தொண்டையில் சதை அல்லது காதில் சீழ் வருதல் போன்ற நோய்கள் இருந்தால் வாதத்தின் தீவிரம் அதிகரிக்கும்.

சிலருக்கு முடி அதிகம் கொட்ட ஆரம்பிக்கும். மேலும் தோல் வியாதிகளுக்கு சொத்தைப் பல் உற்ற நண்பன்.

ஆகவே பழுதடைந்த பற்களை எடுத்து விடுதலே சிறந்தது. பற்களை முறையாக எடுப்பதால் கண்ணுக்கோ, அல்லது மற்ற உறுப்புக்களுக்கோ எவ்விதத் தீங்கும் வராது.

பல் எடுத்த இடத்தில் செயற்கைப் பல் பொருத்திக் கொள்ளலாம்.

செயற்கைப் பற்களில் இரண்டு வகை உண்டு.

(1) தினமும் எடுத்து மாற்றுவது

(2) நிலையாகப் பொருத்துவது.

நிலையாகப் பொருத்த பர்ஸ் கொஞ்சம் கனமாக இருக்க வேண்டும்.

18லிருந்து 25 வயதுக்குள்ளாக அறிவுப் பற்கள் அல்லது ஞானப் பற்கள் எனப்படும் கடைவாய்ப் பற்கள் முளைக்க ஆரம்பிக்கின்றன. பெரும்பாலோருக்கு இதனால் எந்தவித தொந்திரவும் வருவதில்லை. சிலருக்கு நாளாக ஆக தாடையின் வளர்ச்சி குறைந்து கொண்டு வருவதால் இந்தப் பற்கள் முளைத்து வெளிக் கிளம்ப இடம் இல்லாது போகவே அவைகள் எப்படியோ வெளிவர வேண்டும் என்று உந்தும்போது வலி ஏற்படும். மிகவும் தாங்க முடியாத வலியுடன் சீழ் பிடிக்க ஆரம்பித்து காய்ச்சல் காது வலி போன்ற பின் விளைவுகள் ஏற்படும்.

இதற்குச் சிகிச்சையைப் பற்றிக் கவனிப்போம்.

முதலில் சீழைக் கட்டுப்படுத்தி விட்டு பல் மேல் மூடியுள்ள சதையை அகற்றி விடுவதோ அல்லது எக்ஸ்ரே உதவி-கொண்டு இப்பற்கள் வெளியே வர இயலாது என்று உறுதி செய்துகொண்டோ மிகவும் கை தேர்ந்த பல் மருத்துவ நிபுணரால் இந்தப் பற்களை அகற்ற வேண்டும்.

இப்பற்களை அகற்ற மிகவும் திறமையும் அனுபவமும் தேவை. ஏனெனில் சில

சமயங்களில் இப்பற்கள் நேராக இல்லாமல் குறுக்கே படுத்துக் கொண்டோ, தலைகீழாகவோ, முளைத்திருக்கும். அறுவை சிகிச்சை மூலம்தான் இம்மாதிரி பற்களை அகற்ற முடியும். சிகிச்சையின் போது மயக்க மருந்தின் உதவியை நாட வேண்டியிருக்கும்.

பற்களின் உபாதைகளிலிருந்து விடுபட கொட்டைமுத்து கட்டு வைப்பது, மண்ணெண்ணெயில் வாய் கொப்பளிப்பது, எருக்கம் பாலை வைப்பது, உப்பைத் தேய்ப்பது, கிராம்பு எண்ணெய் தடவுவது, ஆஸ்ப்ரோ போன்ற மருந்துகளை உண்பது, போன்ற கொடுமையான சிகிச்சைகளால் பல் மேல் மூடியுள்ள ஜவ்வு வெந்து காயம் ஏற்பட்டு



துர்நாற்றத்தைக் கிளப்பி, முதலில் அதற்கு சிகிச்சை அளிக்கும் நிலைமை ஏற்படுவதும் உண்டு.

இச்சமயத்தில் இங்கு தெருக்களில் வரும் பல் மருத்துவர்களைப் பற்றி எச்சரிப்பதும் அவசியமாகிறது.

அவர் உங்களிடம் வாங்குகிற 50 பைசா ஒரு ரூபாய்க்கு பல்லில் இடும் அமிலம் ஈறுகளைச் சிதைத்து எலும்புகளைக் கரைத்து பற்களை வலுவிழக்கச் செய்யும். அப்படி சிகிச்சை பெற்ற சிலருக்கு மாற்றுச் சிகிச்சை செய்து அப்புண்ணை ஆற்றுவது மிக மிகக் கடினம்.

இந்தியாவைத் தவிர வேறு எந்த நாட்டிலும் இது காணப்படுவது இல்லை.

மேலும் இப்பருவத்தில்தான் பால் இன உணர்ச்சி ஏற்படுகிறது. தவறான வழியில் சென்று தங்கள் இச்சைகளை தீர்த்துக் கொள்ள முயலுவதால், பின்னால் பயங்கர விளைவுகளை அனுபவிக்கின்றனர்.

இந்நோயினால் வாயில் 'ஷேங்கர்' என்று சொல்லப்படும் கட்டிகள்வரும், வாய் ஓரங்களில்தென்படும் கம்மா எனப்படும்நோய்ஏற்பட்டு வாய்க் கூரையிலும் துவாரம் ஏற்பட்டு அல்லல் படுவர். இந்த துவாரத்தை சரி செய்தல் கடினம். சில சமயம் மேல் செட்டிலுள்ள ரப்பரினால் கூட ஏற்படும். இக்காலத்தில் அதனால்தான் இம்மாதிரி ரப்பர்கள் பொருத்துவதில்லை. துவாரம் ஏற்பட்டால் சாப்பிட்ட உணவுகள் துவாரம் மூலம் மூக்கின் வழியே வெளியேற எத்தனிக்கும்.

இதற்கு என்ன சிகிச்சை?

பென்சிலின் போன்ற மிகச் சிறந்த மருந்துகளைப் பயன்படுத்தியும், மீண்டும் தவறான பாதையில் செல்லாது இருந்தாலும் இந்நோயினைக் குணப்படுத்தலாம்.

ஏற்பட்ட துவாரத்தை அடைக்க ஆப்டுரேட்டர்களை அணிவதன் மூலம் பலன் ஏற்படும்.

இதை அறியாது, முதலில் பல் மருத்துவர் தன்னுடைய கையை அவர்களது வாயில் வைத்துச் சோதிப்பதால் பாவம், தவறு செய்யாத மருத்துவருக்கும் இந்நோய் ஏற்பட ஏதுவாகிறது.

இனி புற்று நோய் பற்றிச் சுருக்கமான முறையில் காண்போம்.

வெற்றிலை பாக்கு, பீடி, சிகரெட் போன்றவற்றை அதிக அளவில் உபயோகிப்பதாலும், கூர்மையான பற்கள் கன்னங்களில் உராய்வதாலும் புற்று நோய்கள் வாயில் தோன்றுகின்றன.

ஆரம்பத்தில் வலியே தென்படாத இந்த ரணங்கள் திடீரென்று வெகு வேகமாகப் பரவ ஆரம்பிக்கின்றன.

பரவ ஆரம்பித்து பின் நிணநீர் சுரப்பிகள் வழியே மற்ற பாகங்களுக்குப் பரவ ஆரம்பிக்கின்றன. அங்ஙனம் பரவாமல் இருக்கும் ஆரம்ப கட்டிகள், ரணங்கள் மற்றும் புண்களை நிச்சயம் குணப்படுத்தலாம்.

வேகமாகப் பரவிய புற்றுக்கு ஒரு பகுதி தாடையையே அகற்றிவிட்டு விலா எலும்புகளிலிருந்து ஒரு பகுதியை எடுத்து வைத்து முக லட்சணம் கெடாமல் இருக்குமாறு செய்கின்ற முறைகள் தற்போது உள்ளன.

இவை அனைத்தும் பயன் தராவிட்டால் ரேடியம் அல்லது கோபால்டு சிகிச்சை அளிக்க வேண்டும்.

இனி புண்களில் ஏற்படும் இரத்தக் கசிவு பற்றிக் காண்போம்.

பற்களில் ரத்தம் வருவதை எக்காரணம் கொண்டும் அசட்டை செய்யலாகாது. ஏனெனில் இவை ரத்தப் புற்று நோய் (லுகிமியா) அல்லது இரத்தக் கசிவு நோய் (பர்ப்பூரா) ஆகியவற்றின் அறிகுறிகளாக இருக்கலாம்.

இவற்றில் பர்ப்பூரா நோய் பெரும்பாலும் மாத்திரைகளின் விஷத் தன்மையினாலும் (குறிப்பாக குளோரோமைசிடின், ஆஸ்பிரின்) ஏற்படலாம்.



## நல்ல பெண்மணி

இள வயதினர் எவ்வளவோ பேர் நிறைய சாதனைகள் செய்கிறார்கள். ஆனால் எங்கள் பக்கத்தில் உள்ள லட்சுமி சுப்பா ராவ் என்ற அம்மையார் (சுமார் 76 வயது) செய்யும் சாதனைகள் கணக்கில் அடங்கா. அமுசப்பா நகர் மாதர் சங்கத்தின் தலைவியான இவர் இவ்வருடம் தோட்டக் கலைப் பொருட் காட்சி நடத்திய போட்டியில் சிறப்புப் பரிசு பெற்றிருக்கிறார். வீடு முழுவதும் அவருடைய கைவண்ணம் – சோபா விரிப்புகள், பொம்மைகள், பாடிக் என்று வித விதமாக நம் கண்களை விட்டு அகலாமல் ரசிக்கும்படி அமைந்திருக்கும்.

சிறந்த சங்கீத ரசிகர். பொறுமைக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டு. உபயோக மற்றது என்று ஒரு பொருளையும் விடாமல் யாவற்றையும் உபயோகமாக சிறந்த கலைப் பொருட்களாக மாற்றிவிடும் திறமை உடையவர்.

தன்னுடைய ஒரே மகனை இழந்த துக்கத்திலும் அதை வெளிக் காட்டாமல் எல்லோருடனும் இனிமையாகவும், கலகலப்பாகவும் பழகுவார். எந்தக் கைத்தொழில் ஆனாலும் விரும்பிக் கற்க வருவோருக்கு அலுக்காமல் நன்கு சொல்லிக் கொடுக்கும் திறமை உடையவர்.

இவருடன் பழகியவர் யாவரும் இவர் ஒரு சிறந்த பெண்மணி என்பதை மறுக்காமல் ஒப்புக்கொள்வார்கள் என்பது திண்ணம்.

–திருமதி சாந்தா

**இவரைப் போல நீங்கள் பார்த்த நல்ல பெண் மணியைப் பற்றி போட்டோவுடன் எழுதுங்களேன் சன்மானம் ரூ. 20/- உண்டு**

ஆகவேதான் மருந்துகளை மருத்துவரின் ஆலோசனை இன்றி நாமாகவே சாப்பிடுவது பயங்கர விளைவுகளை ஏற்படுத்துகிறது.

ஆனால் ரத்தக் கசிவு தோன்றினால் இது தான் காரணம் என்று எண்ணிப் பதட்டமடையத் தேவையில்லை. ஸ்கர்வி எனப்படும் வைட்டமின் சி' குறைபாட்டினால் கூட ஏற்படும்.

அடுத்து, வாயில் புண்கள் தோன்றினால் அலட்சியப் படுத்தக் கூடாது.

பெரும்பாலானோர்க்கு வைட்டமின் பி' காம்ப்ளெக்ஸ் அல்லது ஃபோலிக் ஆஸிட் குறைபாட்டினால் புண் ஏற்படும். மேலும் மனிதன் கவலைகளும் உணர்ச்சி வசப்படுதலும், டென்ஷன் மிகுந்த வாழ்க்கையும் புண்கள் தோன்றக் காரணமாகும்.

பால்வினை நோய்களும் டி. பி. போன்ற நோய்களும் அபூர்வமாக புண்களை ஏற்படுத்துவதும் உண்டு.

உணவுப் பொருட்கள் – குறிப்பாக ரசம் குளிக்காத ஈயப் பாத்திரத்தில் செய்வது பெண்களுக்கு வழக்கம். 'பிளம்பிஸம்' என்னும் ஈய விஷத்தினால் ஈறுகளில் சில சமயம் நீலம் பாய்ந்து ஆபத்து ஏற்படுத்தும் நோய் ஏற்படுகிறது.

இதற்கு ஈயத்தைத் தவிர்ப்பது நல்லது. அவசியமும் கூட.

சில சமயம் கொட்டாவி வரும்போது, வாய் விட்டுச் சிரிக்கும்போது ஓ'வென்று வாய் திறந்து அழும்போது கீழ் தாடை அதன் பூட்டிலிருந்து கழன்று வாய் மூடமுடியாது தொங்கிக் கொண்டிருக்கும் பரிதாப நிலை ஏற்படும்.

திறந்த வாய் மூட முடியாததால் பயத்தையும், வலியையும் கூடிய இது பல் மருத்துவரால் நேர்த்தியாகச் சரி செய்யப் பட்டு பூட்டிற்குள் தள்ளப்படும்.

சர்க்கரை நோயாளிகள், ரத்தக் கொதிப்பு நோயாளிகள், இதய நோய்கள் மற்றும் கர்ப்பிணிகள் தம்முடைய நோயின் தன்மையையும், உடலின் உண்மையான நிலையையும் பல் எடுக்கும் மருத்துவரிடம் தெரிவித்தால் ஆபத்தினைத் தவிர்க்கலாம்.

நீரிழிவு நோய், ரத்தக் கொதிப்பு நோய் ஆகியவற்றைக் கட்டுப்படுத்தி பின் பல் சிகிச்சை செய்யலாம்.

கர்ப்பிணிகள் வலி மிகுந்த பற்களை எடுத்துக் கொள்வதால் தீங்கு நேராது. ஆனால் ஏழாவது மாதத்திலிருந்து 'டெட்டனஸ் டை ஆக்ஸைடு' என்ற தடுப்பூசி போடப்பட வேண்டும்.

நம்மில் பலர் பல் மருத்துவருக்கு, பல்லைப் பிடுங்குவதும், சுத்தம் செய்வதும் தான் பணி என்று நினைத்து வருகிறோம். அவர்கள் பணி அதுமட்டுமல்ல. தாடை வளர்ந்தோ அல்லது சப்பியோ இருக்கின்ற பலரை நாம் பார்க்கிறோம். தாடைகள் அதிகமாக வளர்ந்து வருகிறவர்களுக்கு

சமுதாயத்தில் உரிய மதிப்புக் கிடைப்பதில்லை. மேலும் அவர்கள் உணவு உண்ணும் போது பெரும்பாலான பகுதி வெளியே சிதறி விழுகிறது.

இதற்கு அதிகப்படியான எலும்பை அகற்றி சிறிது நாட்கள் தாடையை அசையாது வைத்துச் சரி செய்யலாம்.

வாய் சப்பி உள்ளவர்கள் தாடை வளர்ச்சி குறைவினால் அதிகமாக வாயைத் திறக்க இயலாமல் உணவு சரியாக உட்கொள்ள இயலாது தவிக்கின்றனர்.

இவர்களுக்கு விலா அல்லது தொடையிலிருந்து எலும்புகளை எடுத்துத் தாடையில் பொருத்திச் சரி செய்யலாம்.

ஆக, தாடை அமைப்பை நன்கு மாற்றி அவர்களை நல்ல பிரஜைகளாக மாற்ற பல் மருத்துவர் செய்யும் பணி பாராட்டுக்குரியதன்றோ!

உங்கள் பற்களைப் பாதுகாக்கப் பொன்னான விதிகள்:

(1) காலையிலும் இரவிலும் நல்ல பிரஷ் கொண்டு முறைப்படி பல் துலக்குங்கள்.

(2) பிரஷ்ஷின் பிரஸ்ஸில்கள் உருவமைப்பு மாறத் தொடங்கியதும் ரேத் பிரஷை மாற்றுங்கள்.

(3) பல் துலக்கிய பின் கைகளால் ஈறுகளை நன்கு அழுத்தித் தேய்க்கவும்.

(4) மாவுப் பொருள்களையும், பல் எனாமலைச் சிதைக்கும் மிகச் சூடான பானங்களையும், மிகக் குளிர்ந்த பானங்களையும் தவிர்க்கவும்.

(5) வைட்டமின்களும் மினரல்களும் (தாதுப் பொருள்களும்) அடங்கிய உணவை உண்ணவும். (பழங்கள், காய்கறிகள், முட்டை, பால், மீன் மற்றும் இறைச்சிகள்)

(6) சாப்பாடுகளுக்கு இடையே இனிப்புகளையோ ஒட்டிக் கொள்ளும் உணவுப் பொருள்களையோ உண்ணக் கூடாது. சாப்பிட்டு முடித்த பின்புதான் இனிப்பு சாப்பிட வேண்டும்.

(7) சாப்பிட்ட பின் வாயை நன்றாகக் கொப்பளிக்கவும்.

(8) குழந்தைகள் விரல் சூப்பும் பழக்கத்தை மேற்கொள்ளாதவாறு கவனித்து வரவும்.

(9) குழந்தைகள் தூங்கும்போது வாயை திறந்து தூங்க அனுமதிக்கக் கூடாது.

(10) குழந்தைகள் உணவினை நன்றாக மென்று சாப்பிடப் பழக்க வேண்டும்.

(11) பீடி, சிகரெட், வெற்றிலை, புகையிலைப் பழக்கம் அறவே தடுத்து நிறுத்தப்பட வேண்டும்.

(12) இறுதியான, ஆனால் உறுதியான ஒன்று. ஆறு மாதங்களுக்கு ஒரு முறை உங்கள் பல் மருத்துவரை அணுகி சிறந்த ஆலோசனை பெறுங்கள்.

விவரங்கள் தொகுப்பு: லட்சுமி நடராஜன்

## அரச மரத்தை ஏன் சுற்ற வேண்டும்?

எந்த மரத்தின் இலையின் நுனியானது எப்போதும் பூமியை நோக்கிக் கொண்டிருக்கிறதோ அந்த மரத்தடியில் அதிகாலையில் சூரியோதயத்துக்கு முன் சுத்தமான பிராண வாயு நிரம்பியிருக்கும். இதன்படி எப்போதும் பூமியையே நோக்கியுள்ள நுனிகள் கொண்ட இலைகள் வாய்ந்த மரங்கள் இரண்டே! அவையே வேப்ப மரமும் அரச மரமும்.

மரங்களின் கீழே அதிகாலையில் நிரம்பியிருக்கும் இந்தத் தூய்மையான இறுகிய பிராண வாயு ஒரு சிறந்த கிருமி நாசகாரி. இது கண்ணுக்குத் தெரியாத எந்தக் கிருமிகளையும் நசிக்கும் தன்மையுடையது; முக்கியமாகக் கர்ப்பப் பைக் குறைகளையும் வியாதிகளையும் நீக்கும் தன்மையுடையது. இந்த இரண்டு மரங்களும் இரத்த விருத்தி இரத்த சுத்தி முதலிய காரியங்களைச் செய்து தேக ஆரோக்கியத்தைக் கொடுக்கின்றன. தேக ஆரோக்கியம் குறைந்தோ, இரத்த விருத்தி இல்லாமலோ கர்ப்பப் பை சம்பந்தமான குறைகளோ உள்ள பெண்மணிகள் தினந்தோறும் சூரிய உதயத்துக்கு முன் இம்மரங்களைச் சுற்றி வந்தால் கட்டாயம் தக்க பலனை அடையலாம் என்று 'இயற்கை மருத்துவம்' என்ற நூல் குறிப்பிடுகிறது.

பிள்ளை இல்லாத குறையுள்ள பெண்மணிகள் அரச மரத்தைச் சுற்றி வருவதின் காரணம் விஞ்ஞான முறைப்படி மேலே கூறியுள்ள காரணம்தான் என்றும். அதனால்தான் நம் முன்னோர்கள் அரசை ஆணாகவும், வேம்பைப் பெண்ணாகவும் கருதிக் கல்யாணம் என்ற சடங்கையும் அவைகளுக்கு ஏற்படுத்தி இவ்விரண்டு மரங்களையும் சேர்த்து வைத்து இம்மரங்களைச் சுற்றி வரச் சொல்கிறார்கள் என்றும் இந்நூல் கூறுகிறது.

வேம்பும் அரசும் பல விதத்தில் நமது தேக சுத்தத்தைக் காக்க உபயோகப்படுகின்றன. ஆகாயத்தைச் சுத்தம் செய்வதற்காகவே யாகம் செய்யும் காலங்களில் ஹோம நெருப்புகளில் சமித்து என்று கூறப்படும் அரசங் குச்சிகளைப் போட்டு எரிக்கிறார்கள் என்றும் வேதத்தில் கூறப்பட்டுள்ளது.

—வசந்தா கோவிந்தன்

# தையல்

16 வயதுக்கான கீழ்க்கண்ட அளவுகளைக் கொண்ட இந்தச் சோளியைத் தைப்பதற்கு சுமாராக 75 அல்லது 80 செ. மீ. துணி தேவைப்படும். பிரிண்டட் அல்லது ப்ளெயின் டூபை டூ வான், மற்றும் மெல்லிய துணிகள் சோளி தைக்க ஏற்றவை.

## [illegible]

0 to 1 – 14'' (உயரம்)
0 to 2 – 8'' (மார்பின் கால் பாகம்)
0 to 3 – 4'' மார்பின்கால் பாகத்தில் பாதி
0 to 5 – 3'' (கழுத்தளவு)
5 to 6 – 2½'' (தோள்பட்டை அளவு)
6 to 6' – ½'' (தோள்பட்டை இறக்கம்)
4 – 8'' (பாதி மார்பளவின் மையம்)
7 – 2வது கட்டத்தின் மையப் புள்ளி
8 to 1 – 4'' (இது பொதுவான அளவு–யோக் ஷேப் அமைப்பிற்காக)
4' to 7' – 1'' (இடுப்பின் ஷேப்பிற்காக)
7' to 8' – 2½'' (யோக் ஷேப் அமைப்பிற்காக – இது பொது அளவு)

கை:
0 to 1, 2 to 3 – 6'' (கை உயரம்)
0 to 2, 1 to 3 – 13'' (அகலம்)
4 மத்திய புள்ளி
1 to 1', 3 to 3' – (கை ஷேப்புக்காக ½'' (அ) 1''

## பேப்பர் மாதிரியை வரையும் [illegible]

சோளியின் தேவையான உயரம், மார்பு சுற்றளவு, இடுப்புச் சுற்றளவு, கழுத்து, தோள்பட்டை, கை நீளம், அகலம் (Bottom) ஆகியவற்றை இஞ்ச் டேப்பால் அளந்து குறித்துக் கொள்ளவும். பின்னர் ஒரு பழைய செய்தித் தாளில் மாதிரியை வரையத் துவங்கவும். பாடியின் முன் பகுதி, பின் பகுதி ஆகியவற்றைச் சேர்த்தே வரைவதால், முன் பின் கழுத்துக்களையும் முன் பகுதியின் யோக் பகுதி dart ஆகியவற்றையும் தனித் தனியாக வரைந்து கொள்ள ஏதுவாக இருக்கும். (படத்தைப் பார்க்கவும்) முதலில் உயரத்தையும் (0 to 1) முன் பின்பகுதிகளில் மார்பின் கால் பாகத்தையும் வரைந்து கொள்ளவும். (0 to 2) பின்னர் அவற்றைச் சமமான 4 கட்டங்களாகப் பிரித்துக்கொள்ளவும். முதல் கட்டத்தை (0 to 3) 3 சம பாகங்களாகப் பிரித்து முன் பாடியில் 2வது பாகத்திலும் பின் பாடியில் முதல், இரண்டாவது பாகத்திற்கு இடையிலும் மார்க் செய்து, முன் பகுதியில் படத்தில் உள்ளது போன்று (0 to 5) தேவையான கழுத்து அகலத்தையும் குறித்துக்கொண்டு ''ப'' வடிவில் கழுத்து ஷேப் வரையவும். பின் பாடியில் வட்டக் கழுத்து வரையவும். தோள்பட்டை அளவைக் குறித்துக்கொண்டு (5 to 6) ½'' தோள்பட்டை இறக்கம் அமைத்து சாய்வாக வரைந்து கொள்ளவும். (6 to 6') முன் பாடியையும், பின் பாடியையும் பிரிக்க நடுக் கோடான 4 to 4'ல், 2வது கட்டத்தின் மத்தியில் மார்க் செய்து (7) கொள்ளவும். 6'ஐயும் 7ஐயும் இணைத்து ஆம்ஹோல் வரையவும். முன் பாடியில் மட்டும் கை ஷேப் படத்தில் உள்ளதுபோன்று இரு புறமும் கூர்மையாகவும் மத்தியில் முக்கால் அங். வருமாறும் வரையவும். இடுப்புப் பகுதியில் 1'' மார்க் செய்து (7' to 4')Hipshape ஐ 7to7' ஐ இணைத்து உருவாக்கவும். பின்னர் ஒபன் பக்கத்தில் யோக்கின் நீளம் (8 to 1) 4'' வருமாறும், இடுப்பின் பக்கவாட்டுப் பகுதியில் (8' to 7') 2½'' இருக்குமாறும் மார்க் செய்து படத்தில் உள்ளது போன்று ஷேப் வரையவும்.

கை: கையின் நீள அகலங்களைக் கொண்டு படத்தில் உள்ளது போன்று கை வரையவும். நீளத்தை (0 to) 3 சம பாகங்களாகப் பிரித்துக் கொள்ளவும். நடுக் கட்டத்தில் மத்தியில் மார்க் செய்து மத்திய புள்ளியான 4ஐயும் இணைத்து படத்திலுள்ளது போன்று கை வரையவும். 'முன் கை பகுதியில் மட்டும் முக்கால் அங்.துக்கு ஷேப் அமைக்கவும். ஆம்ஹோல் 14'' ஆனால் அதில் 1''ஐக் கழித்தால் மீதியுள்ள 13''ஐ கையின் அகலமாகக் கொள்ள வேண்டும்.

மேற்கண்டவாறு பேப்பர் மாதிரியை வரைந்த பின்னர்... என்ற கோடிட்ட இடம் வழியாகப் பேப்பர் பேட்டனைத் தனியாக வெட்டி எடுத்துக் கொள்ளவும்

## பெண்களின் கட் சோளி (CUT CHOLI)

அளவுகள்

உயரம் – 14''
மார்பு சுற்றளவு – 32/4 = 8''
கழுத்து – 3''
தோள் பட்டை – 2½''

ஆம் ஹோல் – 14''
கை நீளம் – 6''
கை அகலம் – 13''

## துணியில் வெட்டும் முறை:

துணியைக் கரைப் பகுதி உயரவாக்கில் அமையுமாறு பார்த்து வைத்து முன் பாடியின் அகலத்திற்கேற்ப 2 ஆக குறுக்கே மடிக்கவும். பேப்பர் பேட்டனை மடிப்பின் ஓரத்தில் வைத்துக் குண்டூசியால் பின் செய்து கொண்டு எல்லா இடமும் தைப்பதற்கு கால் அங்.ம், இடுப்பின் பக்கவாட்டுக் பகுதியில் மட்டும் 1'' விட்டு பென்சிலால் வரைந்து வெட்டிக் கொள்ளவும். யோக் மட்டும் 4 துண்டுகள் வெட்டிக் கொள்ளவும் (முன் பாடியின் வலது புறம் 2 துண்டும் இடதுபுறம் 2 துண்டும் வரும்.) பின் பாடியையும் தைப்பதற்காக எல்லா இடமும் கால் அங்.மும் இடுப்பின் பக்க வாட்டில் மட்டும் 1'' விட்டு வரைந்து வெட்டிக் கொள்ளவும்.

இரண்டு கைகள் வெட்டிக் கொள்ளவும். கையின் கீழ்ப் பகுதியில் மட்டும் மடித்துத் தைப்பதற்காகத்தேவையான அளவு(1''or 1½) இடம் விட்டு வரைந்து வெட்டிக் கொள்ளவும்.

முன் பாடியில் படத்தில் உள்ளதுபோன்று ஒபனிலிருந்து 2½''ல் (இது எல்லா சோளிக்கும் பொதுவான அளவு) முக்கால் அங். அகலம் அல்லது 1'' அகலத்தில் ஒன்றரை அங். உயரத்தில் நடு dart ஐயும் மற்ற இரு dart களையும் (இவை மூன்றையும் இணைப்போமானால் நடுவே ஒரு புள்ளியில் இணையுமாறு இருக்க வேண்டும்.) வலது. இடதுபுற முன் பாடியில் மார்க் செய்து கொள்ளவும்.

## தைக்கும் முறை:

முதலில் முன்புற பாடியை எடுத்துக் கொள்வோம். 2½'' இடைவெளியில் (ஒபனிலிருந்து) முக்கால் அங். dart ஐ முதலில் மிஷினால் தைத்துக் கொள்ளவும். பின்னர் இதற்கு மேலாக ஒபனிலிருந்து அமையும் கால் அங். முள்ள dart ஐ படத்தில் உள்ளது போன்று தைக்கவும். ஆம் ஹோலிலிருந்தும் கால் அங். நீண்ட dart அமைக்கவும். இவ்வாறு வலது. இடது புறப் பகுதிகளில் dart தைத்த பின்னர் கீழ்ப்புற யோக்கை படத்தில் காட்டியுள்ளவாறு ஒன்றை கெட்ட பக்கமும் ஒன்றை நல்ல பக்கமும் வைத்து கால் அங். மிஷினில் தைக்கவும். பின்னர் பாடியை அப்படியே சுருட்டி யோக்கினுள் வைத்து மேற்புறமும், கால் அங் தையல் போடவும். தைத்த பின் யோக்கினுள் உள்ள பாடியை வெளியே இழுக்கவும். இப்பொழுது யோக்குடன் இணைந்த முன் பகுதி கிடைக்கும். (யோக்கின் இரு புறமும் தையல் வெளியில் தெரியாது.) பின்னர் வலதுபுறம் 1'' பட்டியும். இடதுபுறம் 2'' பட்டியும் வைத்துத் தைக்கவும். தோள் பட்டையை இணைக்கவும். பின்புற பாடியின் பாட்டத்தில் 2'' அகலமுள்ள நீண்ட பட்டியை நல்ல பக்கம் கால் அங். தைத்து கெட்ட பக்கம் திருப்பி கால் அங். மடித்து மிஷினில் தைக்கவும். அல்லது ஹெம்மிங் செய்யவும். —இடுப்பின் பக்கவாட்டுப் பகுதியை தேவையான அளவுக்கு பிடித்துத் தைக்கவும். கையின் கீழ்ப் பகுதியை மடித்துத் தைத்துக்கொண்டு 'ஆம் ஹோலுடன் வைத்துப் பார்த்து சரியாக இணையும் இடத்திலிருந்து பாட்டம் வரை (தேவையான பாட்டத்தை மார்க் செய்த புள்ளிவரை) சாய்வாக இணைத்து தைக்கவும். கையை ஆம்ஹோல் அருகில் கொண்டு வந்து. உட்புறம் இரண்டையும் இணைத்து ஒட்டுத் தையல் தைத்து பின் மிஷினல் தைக்கவும். ஒட்டுத் தையலைப் பிரித்து விடவும். க்ராஸ் பீஸால் கழுத்தை தைக்கும் பொழுது ''ப'' வடிவத்தில் முனையில் சரியாகத் திரும்புவதற்காக ப்ளீட்ஸ் வைத்து தைக்கவும். (தைக்கும் முறை ப்ளவுஸில் கூறப்பட்டுள்ளது.) கால் அங். மடித்து கெட்ட பக்கம் ஹெம் செய்யவும். கொக்கியோ, பட்டனோ அவரவர் விருப்பம் போல 3''க்கு ஒன்றாகவோ, 2''க்கு ஒன்றாகவோ வைத்துத்தைக்கவும்.



# ராசிபலன்

## ஜூலை-'83'

### மேஷம்



எதிர்பாராத விதமாக ஏற்பட்டுவிட்ட நிகழ்ச்சிகளின் காரணமாக இம்மாதம் பணத்தை நிறையச் செலவு செய்ய வேண்டியதாக இருக்கும். எனினும் எதிர்பார்த்த பலன் கிடைத்து விடுவதனால், முதலில் கவலைகள் இருந்தாலும், இறுதியில் மகிழ்ச்சியும், நிம்மதியுமே உண்டாகும். குழந்தைகளினால் மன நிம்மதி கிடைக்கும். இம்மாதத்தின் இறுதியில் வாழ்க்கை சகஜ நிலைக்குத் திரும்பி விடும்.

### ரிஷபம்



வெளியூர்ப் பிரயாணங்கள் அல்லது வெளியூரிலிருந்து வந்த விருந்தினர்களின் காரணமாக அலைச்சலும், ஓரளவு பணச் செலவும் உண்டாகும், எனினும் அதிகக் கவலைகளோ, கலக்கமோ இல்லாத சந்தோஷம் மிகுந்த பொழுது போக்குகள் மிகுந்த மாதமாக இது அமையும். புதிதாக அறிமுகமான நண்பரின் மூலமாக புகழும், புதிய துறையில் ஈடுபாடும் ஏற்படும். குழந்தைகளினால் அலைச்சலின் காரணமாக சிறிதே உடல் நலம் பாதிக்கக் கூடும்.

### மிதுனம்



நடுவில் இருந்து வந்த அமைதியான நிலைமை மாறி மீண்டும் குடும்பத்தில் சச்சரவுகள் தலைதூக்க ஏதுவாக இருக்கும். உங்களுடைய பொறுமையும், நிதானமுமே மேன்மேலும் சிக்கல்கள் ஏற்படாமல் பாதுகாத்து விடும். கணவரிடமிருந்து முழுமையான அன்பும், ஆதரவும் கிடைப்பதால் அனாவசியமான குழப்பங்கள் அடையத் தேவையில்லை. குழந்தைகளுடன் வெளியில் சென்றுவர உகந்த மாதமிது.

### கடகம்



வீட்டில் சுப நிகழ்ச்சிகள் இம்மாதத்தின் மூன்றாவது வாரத்தில் உண்டாகும். சுற்றத்தினரின் வருகையாலும், நண்பர்களின் கூட்டுறவாலும் வீட்டில் குதூகலம் பொங்கும். நீண்ட நாட்களாகத் திட்டமிட்டு வைத்திருந்த காரியங்களைத் தொடங்க ஏற்ற மாதமிது. தெய்வானுகூலம் உங்கள் பால் நிறைய உண்டு. பண வரவு செலவுக்கேற்றதாக அமையும். இம்மாதம் சேமிக்க இடமிராது.

### சிம்மம்



குழந்தைகளினால் செலவினங்கள் அதிகமாக உள்ள மாதமிது. அலைச்சலினாலும், கவலையினாலும் ஓரளவு உடல்நிலை பாதிக்கக் கூடும். அலுவலகத்தில் மேலதிகாரிகளின் நன்மதிப்பும், கருணையும் இருப்பதால் எந்தப் பிரச்னையையும் எளிதாக வென்று விடுவீர்கள். பதவி உயர்விற்கும் வாய்ப்புண்டு. இம்மாதத்தின் இறுதியில் ஆன்மீக விஷயங்களில் கவனம் அதிகம் செல்லக் கூடும்.

### கன்னி



வேலைக்கு முயற்சித்துக் கொண்டிருப்பவர்களுக்கு இரண்டாவது வாரத்தில் நல்ல செய்திகள் கிடைக்கும். வெளியூர்ப் பிரயாணங்கள் மேற்கொள்ள

அதிக வாய்ப்பு உண்டு. வெளி நாட்டிலிருந்து நல்ல செய்தியை எதிர்பார்த்துக் கொண்டிருப்பவர்களுக்கு மகிழ்ச்சி தரும் செய்தி வந்து சேரும். குடும்ப விவகாரங்களில் கவனம் செலுத்துவது அவசியம். குடும்ப விஷயத்தில் முக்கிய முடிவெடுக்க வேண்டிய தருணமிது.

## துலாம்

நீங்கள் நீண்ட நாட்களாக யோசித்துக் கொண்டிருந்த விஷயமொன்றைத் தீர்மானிக்க வேண்டிய மாதமிது. நண்பர்களின் கூட்டுறவுடன் புதிய ஒப்பந்தங்களில் இறங்குவதற்கு உகந்த காலமிது. சரியான முடிவும், அயராத உழைப்பும் மேற்கொண்டு விட்டால் பிரகாசமான எதிர்காலமொன்று உங்களுக்காகக் காத்திருக்கிறது. விவாகத்தை எதிர்பார்த்திருப்பவர்களுக்கு நல்ல வரன் கூடிவரும்.

## விருச்சிகம்

இரும்பு சம்பந்தப்பட்ட வியாபாரம் செய்பவர்களுக்கும், சுயவேலை வாய்ப்பு மேற்கொண்டு இருக்கிறவர்களுக்கும் இம்மாதம் நல்ல வாய்ப்பொன்று ஏற்படவிருக்கிறது. விரைவில் காரியத்தில் இறங்கினால் தொட்டதெல்லாம் பொன்னாகும் சூழ்நிலை உண்டாகும். குடும்ப அங்கத்தினர்களின் ஒற்றுமையாலும் கூட்டு முயற்சியாலும் நீங்கள் நினைத்த காரியம் நிறைவு பெறும்.

## தனுசு

அரசியல்வாதிகளுக்கும், விளையாட்டு வீரர்களுக்கும் பொதுமக்களிடையே புகழும் பொருளும் பெற்றுத் தரும். பண வரவு சகஜ நிலையில் இருப்பதால் எதிர்காலத்திற்கு நல்ல முறையில் திட்டமிட்டுக் கொள்ளவும் ஏற்ற மாதமிது. பெரியோரின் ஆசியும், புதிய பிரமுகர்களைச் சந்தித்தலும் அதிகமாகும். மற்றவர்களின் ஆதரவு இருக்கும்போதே அதை முழுமையாகப் பயன்படுத்திக் கொள்வதால் அதிக லாபம் உண்டாகும்.

## மகரம்

நீண்ட காலமாகத் தொடர்பில்லாமல் இருந்த உறவினரின் சேர்க்கையால் புதிய அனுகூலங்கள் உண்டாகும். புதிய கடமைகளும், பொறுப்புக்களும் உண்டாகும். பயன்களும் இருக்கும். உங்களுக்கு இதுவரை சம்பந்தப்படாதது எனினும், சிறந்தது என நீங்கள் நினைக்கும் துறையில் முதலீடு செய்தால் லாபம் உண்டாகும். வெளியூர்ப் பிரயாணங்களும் மேற்கொள்ள வேண்டி வரும்.

## கும்பம்

குடும்பத்தினரின் கட்டாயம் காரணமாக அதிகம் பணத்தைச் செலவிட வேண்டி வரலாம். எனினும் உங்களுடைய சொந்த முயற்சியால் ஈட்டிய பொருளை, சொந்தத் தீர்க்கமான முடிவினால் காத்து விடலாம். இதனால் கைக்கு மீறியதாகச் செலவினங்கள் சென்றுவிட வாய்ப்பில்லை. குழந்தைகளினால் அலைச்சலும் அதிகமாகும்.

## மீனம்

அதிர்ஷ்டமும் உழைப்புக்குத் தகுந்த பலனும் என இரண்டும் கலந்த மாதமாக இம்மாதம் விளங்கும். மிகவும் பழைய நண்பர்களின் உதவியால் எந்த விதக் கஷ்டத்திலிருந்தும் விடுபட்டு சகஜநிலைக்கு வந்துவிடுவீர்கள். எனினும் கொடுக்கல் வாங்கலில் ஓரளவு கண்டிப்புடன் இருப்பதே நல்லது. கோர்ட் விவகாரங்களில் இழுபறியாக இருப்பவை இம்மாதம் ஓரளவு முடிவுக்கு வந்துவிடும்.

பெண்களும் இப்போது ஸ்கூட்டர், கார் என ஓட்ட ஆரம்பித்து விட்டார்கள். இந்த நிலையில் பெண்கள் எத்தனை பேர் லைசென்ஸ் எடுத்துள்ளார்கள், வாகனங்களை ஓட்டுவதில் எவ்வளவு சிரத்தையாக இருக்கிறார்கள் என நான்கு பேரைக் கேட்டபோது-



மிஸ் சுதா

### போக்குவரத்து - விபத்து பதிவுத்துறையின் வடக்குப் பகுதி அதிகாரி திரு. பருக்

பொதுவாக இன்று ஆக்ஸிடெண்டுகள் நாளுக்கு நாள் எண்ணிக்கையில் அதிகமாகிக் கொண்டே போகிறது. எனது பகுதியிலேயே ஒரு நாளைக்கு ஏறத் தாழ 25—30 விபத்துக்கள் நடக்கின்றன. ஆனால் அதில் அதிகம் விபத்துக்களை உண்டாக்குவது – பாதிக்கப்படுவது ஆண்கள்தான்.

மொத்த எண்ணிக்கையில் இரண்டொரு விபத்துக்களே பெண்களால் ஏற்படுகின்றன.

# பெண்களால் சாலை விபத்து நடக்கிறது?

பொதுவாகவே என்னைப் பொறுத்தவரையில் விபத்துக்களை கற்றுக்குட்டிகள் மட்டுமல்லாது அதி வேகமாக ஓட்டுபவர்களும் உண்டாக்குகிறார்கள். பெண்கள் சிக்னலையும் போக்கு வரத்து விதிமுறைகளையும் மீறுமளவு வேகமாகச் செல்வதில்லை. ஆதலால் அவர்களால் விபத்து ஏற்படும் சாத்தியக் கூறுகள் குறைவுதான்.

மேலும் டிரைவிங் பள்ளியில் படிக்கும் ஆண்கள் அவசரமாகக் கற்றுக் கொண்டு லைசென்ஸ் வாங்கிவிட வேண்டும் என்ற ஒரே நோக்கில் செயல்படுவதால் அவர்களால் போக்குவரத்து விதிகளை அதிகம் அறிந்து கொள்ள முடிவதில்லை. இதனாலும் விபத்துகள் ஏற்படுகின்றன. அவசரத் தேவைகள்—ஓட்டுனர் வேலைகள், டென்ஷன் ஆகியவை ஆண்களுக்கே அதிகம். இதனாலேயே அதிகம் விபத்துக்கள் இவர்களால் ஏற்படுகிறது.

ஆனால் கார் ஓட்டும் பெண்கள் அதிக டென்ஷனை உடையவர்களாக இருக்க வாய்ப்பில்லை. ஸ்கூட்டர் ஓட்டும் பெண்கள் 'ரிஸ்க்' எடுப்பதில்லை. இவர்கள் அதிஜாக்கிரதையாக வண்டிகளைக் கையாளுவதால் விபத்துக்களைச் சந்திப்பதில்லை.

### லைசென்ஸ் வழங்கு துறை அதிகாரி என். ராவ்:

இங்கு லைசென்ஸ் வாங்க வரும் நபர்களில் மூன்றில் ஒரு பங்கினர்தாம் பெண்கள். அதுவும் அவர்கள் வீட்டில் வண்டி இருக்கிறதே என்பதாலும், சொந்தத் தேவைகளுக்காகவும் மட்டுமே லைசென்சுக்கு விண்ணப்பிப்பதால் அவர்களால் ஏற்படும் விபத்துக்கள் மிக மிகக் குறைவே.

இங்கு நேரிடையாக நபர்கள் வந்தாலும் சரி, அல்லது பயிற்சிப் பள்ளிகள் வாயிலாக வந்தாலும் சரி. அவர்களுக்கு உரிய முறையில் டெஸ்ட் வைத்தே லைசென்ஸ் வழங்கப்படுகிறது.

சரக்கு மிக அதிகமாக ஏற்றப்பட்ட லாரிகள் பேருந்துகள், ஆட்டோ ரிக்ஷாக்கள், சைக்கிள் ரிக்ஷாக்கள் ஆகியவற்றின் மூலம்தான் அதிக விபத்துக்கள் நடக்கின்றன. நல்ல வேளையாக இந்தத் துறைகளில் இன்னும் நம் நாட்டுப் பெண்கள் நுழையவில்லை. அதனால் விபத்துக்கள் அவர்களால் அந்த வகையில் ஏற்படச் சாத்தியமில்லை. டிரைவிங் பள்ளியில் சரியாகக் கற்றுக் கொள்ளாத ''எல்'' போர்டுகள்தான் அதிக விபத்தை ஏற்படுத்துகிறார்கள். பெண்களோ கார், ஸ்கூட்டர் ஓட்ட மிகவும் சிரத்தையுடனும் கற்றுக் கொண்டு வருகிறார்கள். இதனால் அவர்களால் பிரச்னை இல்லை.

### திரு நாகரத்தினம் (இந்துஸ்தான் டிரைவிங் ஸ்கூல்)

நான் இந்துஸ்தான் பயிற்சிப் பள்ளியை இருபத்தி இரண்டு வருடங்களாக நடத்தி

வருகிறேன். மாதம் சுமார் நாற்பது பேர் வரை என்னிடம் கற்றுக் கொள்கிறார்கள். அதில் பத்துப் பேர் பெண்கள். எனது அனுபவத்தில் கண்டவரை சீக்கிரம் டிரைவிங் கற்றுக்கொள்வது பெண்கள்தாம். வெகு விரைவில் புரிந்து கொள்கிறார்கள். ஆண்கள் சற்று அசட்டைப் போக்கினாலும் அலட்சியத்தாலும் சற்றுத் தாமதமாகக் கற்றுக்கொள்கிறார்கள்.

இதில் வருத்தப்பட வேண்டிய விஷயம் என்னவென்றால் கற்றுக்கொள்ளும் பெண்கள் மெக்கானிஸத்தில் ஆர்வம் இல்லாமல் இருக்கிறார்கள் என்பதுதான். பொதுவாக, நான் நேரடியாக டிரைவிங் கற்றுக்கொடுத்து விடுவதில்லை. முதலில் வண்டியின் பாகங்களைப் பற்றியும் அதன் செயல் முறைகளைப் பற்றியும் ஆரம்பத்தில் வகுப்புகளை எடுத்த பிறகே டிரைவிங் சொல்லித் தருகிறேன். இந்த வகுப்பில் அதிக கவனம் காட்டாத பெண்கள் டிரைவிங்கை மட்டும் வெகு சீக்கிரம் கற்றுக் கொள்கிறார்கள். அப்படி இல்லாமல் இவர்கள் மெக்கானிஸத்தையும் சேர்த்துக் கற்றுக் கொண்டால் இக்கட்டான சூழ்நிலைகளில் சிறப்பாகச் சமாளித்து மிகச் சிறந்த ஓட்டுனர்களாக விளங்குவார்கள்.

போக்கு வரத்து விதிகளையும் அழகாகப் புரிந்து கொள்கிறார்கள். எந்தப் பகுதிகளில் ஹாரன் அடிக்க வேண்டும், எங்கு மெதுவாகப் போக வேண்டும் போன்ற விஷயங்களையும் அதிக சிரத்தையோடு பெண்கள் கற்றுக் கொள்கிறார்கள். அதனால் என் அனுபவத்தைப் பொறுத்தவரை ஆண்களை விடப் பெண்கள் விபத்துக்களை மிகக் குறைவாகவே ஏற்படுத்துகிறார்கள் என்பேன்.

## சென்னை அரசினர் மருத்துவ மனையில் ஹவுஸ் சர்ஜனாகப் பணிபுரியும் மிஸ் சுதா:

நான் பி. யூ. சி. படிக்கும்போதே ஸ்கூட்டர் ஓட்டப் பழகிக் கொண்டுவிட்டேன்.

எங்களைப் போன்றவர்கள் சாதாரணமாக வாகனங்கள் ஓட்டுவதையே முதலில் ஏளனமாகப் பார்த்தவர்கள் இப்போது அப்படிப் பார்ப்பதில்லை. ஆனாலும் எங்களுக்கு இதில் பல சிரமங்கள் வரத்தான் செய்கின்றன.

நாங்கள் பெரும்பாலும் சாலைகளில் மெதுவாகத்தான் போகிறோம். எங்களை வேண்டுமென்றே சீண்டுவதற்காகச் சில ஆண்கள் முரட்டுத்தனமாகத் தங்கள் வாகனங்களை ஓட்டிவர... விபத்தாக முடிகிறது.

மேலும் டிரைவிங் பள்ளிகளில் பெரும்பாலும் ஆண்களுக்கு அளிக்கப்படுவது போல் விரிவான பயிற்சிகள் பெண்களுக்கு அளிக்கப்படுவதில்லை. எனவே நடு வழியில் வண்டி மக்கர் செய்தால் எங்களுக்குப் பழுது பார்க்கத் தெரிவதில்லை. ஓரிருவரைத் தவிர பலரும் ஏளனமாகத்தான் பார்க்கிறார்கள்.

மேலும் எங்களுக்கு அலுவலகத்துக்கு நேரமாகிவிடும்போது நாங்கள் வழக்கத்தை விட வேகமாகப் போவோம். அப்போது முன்னால் செல்பவர்கள் ''பெண்தானே'' என்று எங்களுக்கு வழி விட மறுப்பார்கள். மீறி நாங்கள் அவசரமாகப் போனால் ''ஒரு பெண் தங்களை மீறிக் கொண்டு போவதா'' என்று ஆத்திரம் அடைந்து வேகமாக வந்து எங்களை ஓவர்டேக் செய்து விபத்தை உண்டாக்குகிறார்கள்.

சிலர் எங்களது கவனத்தைத் தங்கள் பக்கம் இருப்ப வேண்டும் என்றே மோதி விடுவது போல் வந்து தொந்தரவு செய்வார்கள்.

எங்களைப் போன்றவர்களுக்காக மட்டும் இல்லை. பொதுவாகவே இது போன்ற விபத்துக்களைத் தடுக்க ஸ்கூட்டர் போன்றவை இன்ன ஸ்பீடில்தான் போக வேண்டும் என்று அமைக்க வேண்டும். அல்லது வேறு ஏதேனும் ஏற்பாடு செய்ய வேண்டும். மற்றபடி லைசென்ஸ் வழங்கப்படுவதில் டிரைவிங்கில் எங்களுக்கு யாதொரு கஷ்டமும் இல்லை.

தொகுப்பு: பவானி

(எதிரில்) அட்டை வண்ணப் படம்: பி. ஈ. ரமணன்

விட்டமின் 'சி' ஜலதோஷத்தைக் குணப் படுத்தும் உதவியை மட்டும் செய்யவில்லை. ஐக்யூவை அதிகரிக்கவும் உதவுகிறது என்பதை இரண்டு மூன்று முறை நோபல் பரிசு பெற்றவரான 'லினஸ் பாலிங்' என்ற மருத்துவ விஞ்ஞானி தாம் எழுதிய நூலில் குறிப்பிட்டுள்ளார்.

—வசந்தா கோவிந்தன்



